# ஹனுமான் சாலீஸா

ஸ்வாமி தேஜோமயானந்தா



# HANUMAN CHALISA

*Swamy Tejomayananda*

# ஹநுமான் சாலீஸா

சுவாமி தேஜோமயானந்தர்

**சென்ட்ரல் சின்மயா மிஷன் ட்ரஸ்ட்**

2,13- வது அவின்யூ ஹாரிங்டன் ரோடு, சேத்துப்பட்டு,

சென்னை- 600 031.

போன் : 28265641, 28214202. 28274048

# பதிப்பாளரின் குறிப்பு

**(ஆங்கிலப் பதிப்பின் குறிப்பில் இருந்து சில பாகங்கள்)**

ஸ்ரீ ஹனுமான் அனைத்து இந்துக்களினாலும் விரும்பப்படுபவர், முக்கியமாக சிறுவர்களுக்கு அவர் ஒரு வீராதி வீரன். ஹனுமான் சாலீஸா மிகவும் பிரபலமான படைப்புகளில் ஒன்று, பல கோடிக் கணக்கானவர்களால் இந்தியா எங்கும் பாடப்படுவது. ஹனுமானின் கதைகளும் அவரது அமானுஷ்ய செயல்களும் இந்துக்கள் அல்லாதோருக்கும் கூட ஊக்கமும், உற்சாகமும் அளிக்கின்றன.

பூஜ்ய குருதேவர் ஸ்வாமி சின்மயானந்தா அவர்கள், சித்தபாரியில், ஸ்ரீ இராமர் கோவிலைக் கட்டுவதற்கு முன்னரே "ஸ்ரீ ஹனுமான் தனது பிரபுவை இங்கு கொண்டு வருவார் என்று கூறி 24 அடி உயரமான ஒரு அனுமான் சிலையை 1982 -ம் ஆண்டு அக்டோபர் மாதம் ஸ்தாபித்தார். ஒவ்வொரு ஐந்து வருடங்களுக்கு ஒரு முறை ஆயிரக்கணக்கான மக்கள் கலந்து கொண்டு மஸ்தகாபிஷேகம் என்பது செய்யப்பட்டது. 2007 ஆம் ஆண்டு இந்த அழகான சிலைக்கு வெள்ளி விழா (25 வருடங்கள் ) கொண்டாடப்பட்டது.

இத்தருணத்தில் பூஜ்ய குருஜி அவர்களது ஹனுமான் சாலீஸாவிற்கான புதிய உரை ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டது.

2008 ஆம் ஆண்டு ஜூன் மாதம் இந்நூலானது இலங்கை சின்மயா மிஷனால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது. இதை தமிழில் வெளிக்கொணர்ந்த அனைவருக்கும் அனுமன் ஆசீர்வாதம் குறைவில்லாது கிடைக்க வேண்டுகிறோம்.

நாம் அனைவரும் பக்தி சேவை எனும் உயர்ந்த பண்புகளை அனுமானிடம் இருந்து பெற்றுக் கொள்வோமாக.

பதிப்பாளர்

# அறிமுகம்

இவ்வுலகில், எவரும் எந்தவிதமான கண்டனங்களும் விமரிசனங்களும் அற்ற வாழ்வை நடத்துவது என்பது மிகவும் கடினமானது, ஏன் - முடியாதது என்று கூடக் கூறலாம். நாம் இராமாயணம் எனும் மஹா காவியத்தைப் படித்தால் இராமர் மற்றும் சீதா தேவியார் கூட இதிலிருந்து தப்பவில்லை என்பதை அறியலாம். பகவானின் மிகச் சிறந்த பக்தர்களில் ஒருவரான ஸ்ரீ ஹனுமானால்தான் இதை வெற்றிகரமாக நிறைவேற்ற முடிந்தது. ஹனுமான் தவறு செய்த அல்லது அவரது செயலுக்காக கண்டனம் செய்யப்பட்ட எந்த ஒரு நிகழ்ச்சியையும் நாம் காண முடியாது. அவர், ஞானம், பக்தி மற்றும் சேவை என்பவற்றின் முழு வடிவம். போற்றும் படியான எண்ணற்ற பண்புகளைக் கொண்டிருக்கிறார் இவ்வாயுபுத்திரன்.

சூரியனின் முக்கியத்துவத்தையும் தினசரி சேவையையும் எளிதில் அறிந்து கொள்ளலாம். அது இரவில் இருப்பதில்லை என்பதால், மிகவும் மதிக்கப்படுகிறது. ஆனால் வாயுவோ தினமும் 24 மணி நேரமும் நம்முடனேயே இருக்கிறது. தன்னுடைய சேவைக்கு எந்தவிதமான அங்கீகாரத்தையோ, நன்றியறிதலையோ எதிர்பாராமல் அனைவருக்கும் சேவை செய்கிறது. அதனால், நாம் அதனைக் கவனத்திற்கு எடுத்துக் கொள்வதோ அல்லது அதை மதிப்பதோ இல்லை, எப்போதுமே இருப்பதால் நாம் அதனைப் பெரிதாக இலட்சியம் செய்வதில்லை. தனது தகப்பனான வாயுபகவானிடம் இருந்து எல்லோருக்கும் எந்தவிதமான கர்வமும் இன்றிச் சேவை செய்யும் இந்த அரியதும் உயர்ந்ததுமான பண்பை வாயு புத்திரன் பெற்றிருக்கின்றார். அவர் சமுத்திரத்தைக் கடந்தார், நுழையக் கடினமான பலம் மிக்க இலங்கையினுள் நுழைந்து அதை எரித்தார். சீதா தேவியார் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்தார், மேலும் இராவணனுக்குச் சேவை புரிந்த இராட்சதர்களைக் கொன்றார். அவர் பல வழிகளிலும் இராமருக்கு சேவை செய்தார். அவரது சேவை

பகவானையே உணர்ச்சிப் பெருக்கில் மூழ்கடித்து விட்டது. இராமரது இதயத்தில் ஹனுமானின் மீதான அன்பும் நன்றி உணர்ச்சியும் நிரம்பியது. அவர் தனது உணர்ச்சியை வெளிப்படுத்தி ஸ்ரீ ஹனுமானை மிகவும் புகழ்ந்தார். அனுமனோ தனது புகழ்ச்சியைக் கேட்டதும் ஒரு உண்மையான பக்தனுக்கே உரிய விதத்தில் இறைவனின் திருவடிகளில் வீழ்ந்து கண்ணீர் நிரம்பிய கண்களுடன், தனது சாதனைகள், பாராட்டுக்கள் யாவும் பகவானிற்கே உரித்தானவை என்கிறார். பணிவுடனும் தன்னடக்கத்துடனும் கூடிய சேவைக்கு எத்தகையதொரு உயர்ந்த உற்சாகமூட்டும் எடுத்துக் காட்டு இது!

தனது எஜமானுக்கு மாறாத நம்பிக்கையுடனும் பக்தியுடனும் சேவை புரியும் ஹனுமானின் இந்த அரிய பண்பை, நாமும் நம்முள் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஆனால் அதனைச் செய்வதற்கு முன்னர், யார் உண்மையிலேயே நமது எஜமானராக இருக்க வேண்டும் என்பதை நாம் முடிவு செய்ய வேண்டும். எவர் இந்தப் பிரபஞ்சத்தின் அதிபதியோ, எவருக்கு சேவை செய்வதால் நம்முள் இருக்கும் தெய்வீகம் வெளிப்பட்டு ஒளிர்கிறதோ அவர் மட்டுமே நமது எஜமானராகலாம். இது அனுமனின் வாழ்க்கையில் வெளிப்படுகிறது. இராமரைச் சந்திக்கும் முன்னர், சுக்ரீவனுக்குச் சேவை செய்த போது அவரது சக்தி அவருள்ளேயே, வெளிப்படாமல் தூங்கிக் கொண்டிருந்தது. சுக்ரீவனால் அதனை வெளிக்கொணர முடியவில்லை. ஸ்ரீராமரோ தனது அருளினால் அதனைச் செய்தார். சுக்ரீவனோ தனது சகோதரனான வாலியின் கைகளால் நிகழக் கூடிய தன் மரணத்தை நினைத்தே பயந்து கொண்டிருந்தான், தனது பாதுகாப்பிற்காக ஸ்ரீஹனுமானிடம் தங்கி இருந்தான். அப்படிப்பட்ட ஒருவர் எப்படி எல்லோருடைய உண்மையான எஜமானராகலாம்?

ஸ்ரீ ஹனுமான் இராம பகவானை முதன் முறையாகக் கண்ட மாத்திரமே தனது உண்மையான எஜமானை அடையாளம் கண்டு, அவரது விசுவாசமிக்க சேவகனாக மாறியதுடன் மட்டும் அல்லாது,

சுக்ரீவனையும் தனது உதாரணத்தைப் பின்பற்ற வைத்தார். சுக்ரீவன் ஸ்ரீ ராமரின் பாதகமலங்களைச் சரண் அடைந்ததுமே அவருக்கு பகவானின் அருள் கிடைத்தது. அவருக்கு பக்தியின் பலனும் கிடைத்தது. இலங்கையில், பலம் மிகுந்த இராவணனைப் போலல்லாது, இராட்சசி லங்கிணியும் விபீஷணனும் இராமருக்குச் சேவை புரிந்தனர். அவர்கள் இருவரும் தமது எஜமானன் தீயவனாக இருந்தாலுங்கூட அவனுக்குச் சேவை செய்தேயாக வேண்டும் என்ற தப்பான எண்ணத்தைக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீ ஹனுமானே அவர்களின் தவறை உணர வைத்தார். இதை உணர்ந்ததுமே அவர்கள் இருவரும் இராம பக்தர்கள் ஆனார்கள்.

இதிலிருந்து, சுக்ரீவனைப் போன்ற ஒரு பலவீனமானவரோ அல்லது இராவணனைப் போன்ற பலம் வாயந்தவரோ நமது உண்மையான எஜமானராக இருக்க முடியாது என்பது தெரிகிறது. இராமர் மட்டுமே உண்மையான எஜமானராக இருக்க முடியும். அவரின் பெருமை இராவணனைப் போன்று அனைவரையும் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்திருப்பதால் வந்தது அல்ல, மாறாக ஸ்ரீ ஹனுமானைப் போன்ற பக்தர்களின் புகழைத் தனது புகழைவிட உயர்த்துவதாலேயே வந்தது.

நாம் அனைவரும் இராமனை நமது உண்மையான எஜமானராக அடையாளம் கண்டு கொள்வதுடன் அவரது சிறந்த பக்தரான ஹனுமானின் மனோபாவத்துடன் அவருக்குச் சேவை செய்வோம். நாமும் அனுமனைப் போல் இறைவனின் புனித நாமத்தைப் பாடி ஆனந்தத்தில் திளைப்போமாக!

ஸ்ரீ ராம ஜய ராம ஜய ஜய ராம!

# ஹனுமான் சாலீஸா

ஹனுமான் சாலீஸா, துளஸீ இராமாயணத்தைப் படைத்த கோஸ்வாமி துளஸீதாஸரின் படைப்புகளில் மிகவும் பிரபலமானது. அவர் நோய்வாய்பட்டிருந்த சமயம் இந்த ஹனுமான் சாலீஸாவை இயற்றினார். ஸ்ரீ ஹனுமானின் புகழைப் பாடியதும் அவரது நோய் குணமானதாகக் கூறப்படுகிறது. கடவுளின் புகழைப் பாடுவதன் நோக்கம் நமது வாக்கினையும் மனத்தையும் தூய்மைப்படுத்துவது ஆகும். கடவுளின் புகழோ எல்லையற்றது. முடிவில்லாதது. எனவே, கடவுளின் புகழனைத்தையும் நம்மால் பாட முடியாது. ஆகவே அவரின் புகழில் நமக்குப் பிடித்தவற்றை பாட வேண்டும். துளஸீ இராமாயணத்தின் சுந்தர காண்டத்தில் கோஸ்வாமி துளஸீதாஸர் ஹனுமானின் புகழைப் பின்வருமாறு பாடுகிறார்.

**அதுலித பலதாமம் ஹேம ஷைலாபதேஹம்**
**தனுஜ வன க்ருஷானும் ஞானினாம் அக்ர கண்யம்,**
**ஸகல குண நிதானம் வானராணாம் அதீஷம்**
**ரகுபதி ப்ரிய பக்தம் வாத ஜாதம் நமாமி.**

அளவற்ற பலத்திற்கு இருப்பிடமாயிருப்பவரும், தங்கமலையைப் போல் ஒளிரும் உடலைக் கொண்டவரும், அசுர இனம் என்னும் வனத்தை அழிக்கும் நெருப்பாயிருப்பவரும், ஞானிகளில் முதன்மையானவரும், எல்லாவிதச் சிறப்புக்களின் பொக்கிஷமாக இருப்பவரும், வானரத்தலைவரும், இராமருக்குப் பிரியமான பக்தருமான வாயு குமாரரை நான் தலை வணங்குகிறேன்.

ஸ்ரீ ஹனுமான் என்றதும் அவரது அளவற்றதும் நிகரற்றதுமான உடல் பலமும், தேஜஸூமே முதலில் நமது கவனத்தை ஈர்க்கும். அவரது தேஜஸ் தங்க மலையை ஒத்தது. இது ஒரு பெறுதற்கரிய சிறப்பாகும். அவர் தனது பலத்தை சாதாரணமானவர்களையோ பலவீனமானவர்களையோ பயமூட்டுவதற்குப் பயன்படுத்தாமல், நல்லவர்களையும் சாதுக்களையும் துன்புறுத்துபவர்களை அழிக்கப்

பயன்படுத்தினார். அவரின் சிறப்பு, அவரது உடல் பலம் மட்டும் அல்ல. சிறந்த அறிவாளியாகவும் ஞானியாகவும் கருதப்பட்டார். அவரது எண்ணங்களும் வார்த்தைகளும் தூய்மையானவை.

ஸ்ரீ ஹனுமானின் அடக்கமும் பணிவும் அவரது பண்புகளிலேயே மிகவும் வியக்கத்தக்கவை. இராவணனோ பலம்மிக்கவனாக இருந்தாலும் அவனிடம் ஆணவம் இருந்தது. அப்படிப்பட்ட ஒருவன் யாருடைய மதிப்பையோ மரியாதையையோ பெறுவதில்லை. ஆனால் ஹனுமான் அனைவராலும் விரும்பப்பட்டார், மதிக்கப்பட்டார், வானரர்களின் உண்மையான தலைவராக இருந்தார். அவருக்கு இராமனிடம் மிகுந்த பிரியம். அதுமட்டுமல்ல அவர் இராமரால் மிகவும் விரும்பப்பட்ட பக்தராகவும் இருந்தார். பக்தனொருவன் பகவானிடம் அன்புவைக்கும் போது, அப்படிப்பட்ட பக்தனை, பகவான் ஆயிரம் மடங்கு அன்புடன் அரவணைக்கின்றார்.

அனுமன் பலருக்குப் புத்துயிர் அளித்தவர். அவர் சுக்ரீவனுக்கு வாலி மேல் இருந்த பயத்தைப் போக்க உதவினார். விபீஷணனைக் கொடிய இராவணனிடமிருந்து விலக்கி பகவானின் பாதங்களைச் சரணடையுமாறு ஊக்குவித்தார். பகவானின் செய்தியைத் தெரிவித்து அன்னை சீதையின் உயிரைக் காப்பாற்றினார். சஞ்சீவனி மூலிகையைக் கொணர்ந்து இலக்குவனது உயிரைக் காப்பாற்றினார். யுத்தத்தின் பின்னர், அயோத்திக்கு இராமபகவான் செல்வதற்கு முன்னரே சென்று பகவானின் வருகையை, தீக்குளிக்கவிருந்த பரதனுக்கு அறிவித்தார்.

ஸ்ரீ ஹனுமான் சாலீஸா ஹனுமானின் புகழைக் கூறுகிறது. இது இந்தியாவின் பல பாகங்களில் பக்தியுடனும், அன்புடனும் பாடப்படுகிறது. சிலர் இதனைத் தமது பிரார்த்தனையாகத் தினமும் பாடிவருகின்றனர். இதனை ஏழு முறையோ அல்லது நூறு முறையோ பாடினால் நமது நோய்கள், இன்னல்கள் மற்றும் இடர்கள் அனைத்தும் நீங்கும் என நம்பப்படுகின்றது. சனிக்கிழமையும், செவ்வாய்கிழமையும் ஸ்ரீ ஹனுமானுக்கு உரிய நாட்கள் என நம்பும் சிலர், அந்நாட்களை

அவரது புகழை நினைவு கொள்வதிலும் கோயிலுக்குச் சென்று ஹனுமான் சாலீஸாவைப் பாடுவதிலும் செலவிடுவார்கள் இப்படியாக, இந்தியாவின் கலச்சாரத்தினதும், பெரும் எண்ணிக்கையான இந்து மக்களின் மத நம்பிக்கையினதும் ஒரு பகுதியாக ஹனுமான் சாலீஸா விளங்குகிறது. சாலீஸா என்றால் நாற்பது. இந்தப் படைப்பு ஸ்ரீ ஹனுமானின் பெருமையையும், புகழையும் கூறும் நாற்பது பாடல்களைக் கொண்டது. இராமாயணத்தை அறிந்தவர்கள் அவரின் பெருமையை அறிவர். நாம் ஒவ்வொரு பாடலையும் விபரமாகப் படிக்கும்போது, அவரது உயர்ந்த பண்புகளான அன்பு, பக்தி, சேவை மற்றும் வீரம் ஆகியவற்றை உணர்வோம், மதிப்போம்.

ஒருவரது வாழ்க்கையில் களங்கம் எதுவும் இல்லாமல் இருப்பதென்பது மிகவும் அரிது. நல்லதோ கெட்டதோ, அனைவரும் விமரிசனங்களுக்கும் கண்டனங்களுக்கும் உள்ளாகின்றனர். இதற்கு எவரும் விதிவிலக்கு அல்ல. இராம பகவானையும் தெய்வீகம் பொருந்திய சீதா தேவியாரையும் கூட இது விட்டுவைக்கவில்லை. இராம பகவான் தர்மத்தின் அவதாரம், சீதையோ தூய்மையின் வடிவம்-இவர்களும் அநியாயமாகக் கண்டனங்களுக்கும் விமரிசனங்களுக்கும் உள்ளானார்கள். ஆனால் இராமாயணத்தில் வரும் ஒரு கதாபாத்திரமோ இந்தக் கண்டனங்களுக்கும் விமரிசனங்களுக்கும் உள்ளாகாமல் அவற்றிற்கு அப்பாற்பட்டு நிற்கின்றது. அவர்தான் ஸ்ரீ ஹனுமான். அவர் கண்டனங்களுக்கும் விமரிசனங்களுக்கும் அப்பாற்பட்டு, எந்த விதமான தவறுகளோ களங்கங்களோ இல்லாமல் சிகரமாக உயர்ந்து நிற்கின்றார். நாம் இந்த நூலைப் படிக்கும் போது, இதனை மேலும் விபரமாக அறிந்து கொள்ளலாம்.

தோஹா :

ஸ்ரீ குரு சரண ஸரோஜ ரஜ நிஜமனு முகரு ஸுதாரி
பரனௌ ரகுபர பிமல ஜஸு ஜோ தாயகு பல சாரி

குருவின் பாதக்கமலங்களின் தூசியினால் தூய்மைப்படுத்தப்பட்ட மனக் கண்ணாடியுடன், பக்தர்களுக்கு நான்குவித புருஷார்த்தங்களையும் தரும் இரகுவம்சத்தின் மாண்புமிக்கவரின் களங்கமற்ற புகழை நான் இப்போது கூறப்போகிறேன்.

ஹனுமான் சாலீஸா " அவதி " எனும் மொழியில் இயற்றப்பட்டது. இது ஹிந்தி மொழியின் ஒரு கிளை, உத்தரப் பிரதேசத்தில் உள்ள அயோத்தியில் பேசப்படுவது. ஹிந்தி மொழியின் கிளையாக இருந்தாலும், பல்லாண்டு காலமாக இது மருவியிருக்கின்றது. ஹிந்தியைப் படிப்பவர்கள் அவதி மொழியின் சில சொற்பிரயோகங்களைப் புரிந்து கொள்வது கடினமாக இருப்பதை உணர்வார்கள். "பரனௌ" என்ற சொல்லின் அர்த்தம், " நான் விவரிக்கப் போகிறேன்" என்பதாகும். இது "விவரித்தல்" என்ற அர்த்தத்தை உடைய "வர்ண" எனும் ஸமஸ்கிருதச் சொல்லின் திரிபாகும். இரகுவம்சத்தவரின் தூய்மையானதும், அப்பழுக்கற்றதும், மேன்மையானதுமான புகழை விளக்கப் போவதாக கோஸ்வாமி துளஸீதாஸர் கூறுகிறார்.

இராம பகவான் இரகுவம்சத்தைச் சேர்ந்தவர். இரகு ஒரு சிறந்த மன்னன். அவரது பெயரால் அந்த அரச பரம்பரை அழைக்கப்படுகிறது. "ரகுபர" என்றால் "உயர்வான இரகுவம்சத்தில் வந்தவர்களில் சிறந்த" - அதாவது இராமரைக் குறிக்கும். இந்தச் செய்யுள் துளஸீ இராமாயணத்தின் அயோத்யா காண்டத்தில் வருகிறது. அங்கு இது இராமரின் புகழைக் குறிப்பிடுகிறது. அயோத்யா காண்டத்தின் இரண்டாவது பாதியோ பரதனைப் புகழ்கிறது. ஆகவே "ரகுபர" என்பது பரதனையும் குறிக்கலாம். ஆனால், ஹனுமான் சாலீஸா மறைமுகமாக இராமரைப் புகழ்ந்தாலும், முக்கியமாக ஸ்ரீ ஹனுமானின் புகழைப் பாடுவதற்காகவே இயற்றப்பட்டது. அப்படியாயின், எதற்காக ஹனுமான் "ரகுபர" என்று குறிப்பிடப்படுகிறார்?

அனுமன் இரகுவம்சத்தில் பிறக்கவில்லை என்பது நாம் அறிந்ததே. அது மட்டுமல்ல, அவர் ஒரு வானரம். இதற்கு

அழகானதோர் விளக்கம் இருக்கின்றது. ஹனுமான் இராமராலும், சீதையாலும் தத்தெடுக்கப்பட்ட ஒரு பிள்ளை என துளஸீ இராமாயணம் கூறுகிறது. மாருதி சீதா தேவியைத் தேடி இலங்கைக்குச் சென்ற போது, அவரை இராமபக்தன் என அறிந்த சீதாதேவி– சுத – எனது மகனே என அழைக்கிறார். அனுமனும் சீதா தேவியை தாயே என அழைக்கிறார். ராம தூதன் இலங்கையிலிருந்து திரும்பியதும் இராமரும் அவரை மகன் என அழைக்கிறார். அனுமனை முதலில் சந்தித்தது இராமரேயானாலும், சீதா தேவியார்தான் முதலில் அவரை மகன் என்று அழைத்து ஒரு தாய் தன் மகன் மீது வைக்கும் உறவிற்கு வித்திட்டு வளர்த்தார். நமது வாழ்க்கையிலும் தாயார்தான் குழந்தைக்கு முதலில் நெருக்கமாகிறார். அதன் பின்னர்தான் தந்தையுடனான உறவு உருவாகின்றது. ஆகவே இராமர் மற்றும் சீதையின் மகனான ஸ்ரீ ஹனுமான் இரகுவம்சத்தவர் ஆகின்றார். அவரது உயர்ந்த பண்புகள் மற்றும் குணங்களின் காரணமாக அவர் ரகுபர – இரகுவம்சத்தின் சிறந்தவர் என அழைக்கப்படுகிறார். ஆனால் வாயு புத்திரனோ தனது வெற்றிகளுக்கான பெருமைகளை எல்லாம் இராம பகவானிற்கே தந்து விடுகிறார். உண்மையில் இவர்கள் இருவரையும் பிரிக்க முடியாது. ஆகவே இந்தச் செய்யுள் இரகுவம்சத்தவரின் புகழ் என்று கூறுவது இந்த இருவரில் யாராகவும் இருக்கலாம்.

கோஸ்வாமி துளஸீதாஸ் கூறுகிறார். நான் ஸ்ரீ ஹனுமானின் புகழை வர்ணிக்கின்றேன். ஸ்ரீ ஹனுமானோ சாதாரணரல்லர். அவர் ஒரு சாதாரண அரசனோ, மத குருவோ அல்லது சர்வாதிகாரியோ அல்லர். இவை எல்லாவற்றையும் விட அவர் உயர்ந்தவர். அவரது புகழையும் மகிமையையும் பாடுவதனால் நான்குவித புருஷார்த்தங்களும் கிடைக்கின்றன. அவை :– அறம், பொருள், இன்பம், வீடு என்பதாகும்.

இங்கு பொருள் என்பது செல்வத்தையும், வளத்தையும் – இன்பம் என்பது உலக மற்றும் புலனின்பங்களையும் குறிக்கும். சிலர்

மிகவும் பணவசதி படைத்தவர்களாக இருக்கலாம், ஆனால் அவர்களால் செல்வத்தை அனுபவிக்க முடியாதிருக்கலாம். அவர்கள் நோயின் காரணமாக உணவை அனுபவித்து உண்ண முடியாதவர்களாக இருக்கலாம். அவர்களில் சிலரது காலை உணவு மருந்தாக மட்டுமே இருக்கலாம். இவர்களுக்குச் செல்வத்தால் என்ன பயன்? மற்றும் சிலருக்குச் செல்வமிருக்கலாம், அவர்கள் உலக இன்பங்களை அனுபவிக்கலாம். ஆனால் அவர்கள் தர்மமான எந்த வித புண்ணிய காரியங்களையும் செய்யாமலிருப்பார்கள். அவர்கள் மற்றவர்களுக்கு உதவி செய்வதில்லை. இவர்கள் தமது வாழ்க்கையில் துன்பத்தையே அனுபவிப்பர். ஆனால் வாழ்க்கையின் அடிப்படையானதும், இறுதியானதும், மாறாததுமான குறிக்கோள் - துன்பங்களிலிருந்தும் பிறப்பு, இறப்பு எனும் சுழற்சியிலிருந்தும் விடுதலை. அனுமனால் நமக்கு இந்தக் குறிக்கோளையும் தர முடியும்.

அனுமனின் புகழைப் பாடுவற்கு, ஒருவர் தம்மைத் தயார் செய்து கொள்வது எப்படி? மனதைத் தூய்மைப்படுத்துவதனால் தயார் செய்யலாம். தூய்மையான பரிசுத்தமான மனதினால் கடவுளுடன் உறவாடி அவர் எங்கும் எதிலும்இருப்பதை உணர்ந்து கொள்ளலாம். “ஸ்ரீ குரு சரண சரோஜ ரஜ நிஜமனு முகுரு சுதாரி”. இங்கு “சுதாரி” என்ற பதம் தூய்மைப்படுத்துவது, பரிசுத்தமாக்குவது, முழுமையாக்குவது என்ற அர்த்தங்களைக் கொண்டிருக்கின்றது. “ நிஜமனு முகுரு” என்பதன் அர்த்தம் மனம் என்னும் கண்ணாடி ஆகும் நான் எனது மனம் எனும் கண்ணாடியைத் தூய்மைப்படுத்துவேன். அதனால் கடவுளின் புகழும் பெருமைகளும் அதில் பிரதிபலிக்கும். தூய்மையான ஒரு கண்ணாடியில் பிரதிபலிப்பு தெளிவாக இருக்கும். எனது மனம் என்னும் கண்ணாடியில் மாருதியின் புகழ் ஒளிரட்டும். மனம் எனும் இக்கண்ணாடியை நான் எப்படித் துடைப்பது? “குரு சரண சரோஜ ரஜ” குருவின் பாதக் கமலங்களில் இருக்கும் தூசியினால் துடைக்கலாம். குருவின் பாதங்களைச்

சரணடைவதாலும் அவருக்குப் பணிவிடை செய்வதாலும் மனதில் உள்ள அழுக்குகளை அகற்றி மனத்தைத் தூய்மையாக்க முடியும்.

**புத்திஹீன தனு ஜானிகே ஸுமிரௌ பவன குமார**

**பல புத்தி பித்யா தேஹு மோஹி ஹரஹு கலேஸ பிகார**

நான் புத்தி இல்லாதவன் என நீங்கள் அறிவீர்கள். வாயு புத்திரனே, நீங்கள் எனக்கு பலம், புத்தி, என்பவற்றைத் தந்தருளி, எனது கிலேசங்களையும் விகாரங்களையும் போக்கியருள வேண்டுமென நான் உங்களை வணங்குகிறேன்.

"ஸுமிரௌ" என்ற "பதம் ஸ்மரண" எனும் ஸமஸ்கிருதப் பதத்தின் திரிபாகும். (ஸ்மரண என்றால் நினைவு கூர்தல் என்று அர்த்தம்) பேச்சு மொழிகள், உச்சரிக்கக் கடினமான ஸமஸ்கிருதச் சொற்களை இனிமையாக்கி உச்சரிக்க இலகுவாக்குகின்றன. இந்தப் பாடல் கூறுவது, நான் (வாயு புத்திரனை) நினைக்கிறேன். "பல புத்தி பித்யா தேஹு மோஹி" எனக்குப் பலத்தைத் தந்தருளுங்கள் – பலம் என்பது இங்கு உடல் பலத்தையும் நல்லொழுக்கத்திற்குத் தேவையான மனோ பலத்தையும் குறிக்கும். "பித்யா" அல்லது "வித்யா" என்பது அறிவைக் குறிக்கும். புத்தி என்பது அறிவைப் பெற நாம் பயன்படுத்தும் ஒரு கருவி. இந்தக் கருவி இல்லாமல், எதையும் நான் எப்படிக் கற்பது? அல்லது அறிந்து கொள்வது ? குருடனுக்குக் கண்கள் உண்டு, ஆனால் அவனுக்கு பார்வை இல்லை. அறிவைப் பெறுவதற்கு, அதற்கான கருவி இருக்க வேண்டும், அறிந்தும் புரியாமல் இருக்கக்கூடாது. புரிந்து கொள்ளும் திறமை இருக்க வேண்டும். அத்துடன் அதனை பயன்படுத்தவும் வேண்டும். இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனுக்கும் புத்தியைப் பெறும் அருளிருந்தாலும் அவர்கள் அனைவரும் புத்திசாலியாக இருப்பதில்லை. புத்திசாலி கற்பதுடன் நிற்பதில்லை. அவன் அந்த அறிவைத் தனக்கும் மற்றவர்களுக்கும் பயனுள்ள விதத்தில் உபயோகப்படுத்துகிறான். ஒருவனிடம் நீ ஏன் எப்போதும் முட்டாள் தனமாக நடந்து கொள்கிறாய், ஏன் உனது மூளையைப்

பயன்படுத்துவதில்லை? என்று கேட்கப்பட்டது. அதற்கு அவனோ, கடவுள் எனக்கு குறைவாக புத்தியைத் தந்திருக்கிறார். நானோ எழுபது வருடங்கள் உயிர் வாழ வேண்டும். தரப்பட்ட புத்தி அனைத்தையும் உபயோகித்தால், அது தீர்ந்து விடும். ஆகவே நான் அதனை மிகவும் அரிதாக உபயோகித்துப் பாதுகாக்கிறேன் என்றானாம்.

மக்கள் தமது புத்தியைப் பயன்படுத்துவதில்லை. இதுவே பந்தத்திற்கும், துக்கத்திற்கும் காரணம். அவர்கள் அதனைப் பயன்படுத்தினாலும் அது உலக விஷயங்களிலும் - மேலெழுந்து விதத்திலுமே பயன்படுத்தப்படுகிறது. அவர்கள் தங்களைப் பற்றியோ, இந்த உலகு அல்லது வாழ்வின் பின்னால் இருக்கும் உண்மையையோ ஆழ்ந்து சிந்திப்பதில்லை.

கோஸ்வாமி துளஸீ தாஸர், "எனக்குப் பலத்தையும் அறிவையும் கொடுத்து அருளுங்கள்" என்று கூறுகிறார். இந்த அறிவு என்ன செய்யும்? "ஹரஹு கலேஸ பிகார" இந்த அறிவினால் மட்டுமே எனது துக்கங்களை நீக்க முடியும். "பிகார என்றால் மாற்றம்". மாற்றங்களை எதிர்கொள்ள, ஏற்றுக்கொள்ள நாம் பயப்படுகிறோம். "கலேச" (ஸமஸ்கிருதத்தில் க்ளேஷ) என்ற பதம் நமக்குத் துக்கத்தைத் தரும் துன்பங்களையும், எதிர் மறையான போக்குகளையும் குறிக்கும். பதஞ்சலி யோக சூத்திரம் ஐந்து விதமான துயரங்களைக் குறிப்பிடுகிறது.

1. அவித்யா - அஞ்ஞானம்
2. அஸ்மிதா - ஆணவம்
3. ராக - விருப்புக்கள்
4. த்வேஷ - வெறுப்புகள்
5. அபினிவேஷ: - மரணபயம்

ஆணவம், விருப்புகள், வெறுப்புகள் மற்றும் மரணபயம் என்பன அஞ்ஞானத்தின் காரணமாக வருபவை. இவை ஐந்தினாலும்

அனைவரும் துன்பப்படுகின்றனர். எவ்வளவிற்கெவ்வளவு நமக்கு விருப்பு வெறுப்புகள் இருக்கின்றனவோ அவ்வளவிற்கவ்வளவு நாம் துக்கத்தை அனுபவிக்கின்றோம். நமக்கு விருப்பமானது கிடைத்தால் நாம் சந்தோஷத்தை அனுபவிக்கின்றோம். வெறுப்பவை நம்மிடம் வந்தால், நாம் துக்கத்தை அனுபவிக்கின்றோம். ஆனால் எப்போதும் நாம் விரும்பும் மனிதர்களும், இடங்களும் பொருட்களும், நம்மைச் சூழ்ந்திருக்கும் என்பது நடக்காத விஷயம். அதுமட்டுமல்ல, நாம் விரும்பும் பொருட்கள் அனைத்தும் நிரந்தரமானவையும் அல்ல. அத்துடன் அவற்றைப் பாதுகாத்து, பெருக்கி அதிகரிக்கும் வழிகளைச் சிந்தித்து நம் மனதை வருத்திக்கொள்கின்றோம். இந்த எண்ணங்கள் அனைத்தும் நமது துக்கத்தையும் மன வருத்தத்தையும் மன உளைச்சலையும் அதிகரிக்கின்றன. ஸ்ரீ ஹனுமான் - பக்தனை - இத்தகைய துன்பங்களிலிருந்து விடுவிக்கின்றார் என்று கோஸ்வாமி கூறுகிறார்.

"புத்திஹீன தனு ஜானிகே" என்றால்"நான் அறிவீனன் என்பதை அறிந்து கொண்டு" என்று அர்த்தம். "தனு" என்றால் உடம்பு "புத்திஹீனன்" என்றால் அஞ்ஞானி, அறிவின்மை என்று அர்த்தம். இந்த உடல் ஜடப் பொருட்களாலானது. அதற்கு உயிர் அல்லது சைதன்யம் என்பதில்லை, அது தானாக எதுவும் செய்ய முடியாது. எப்பொழுது இந்த உடல் இறைவனால் உயிர்ப்பிக்கப்பட்டு, அவரது சக்தியால் ஊட்டுக்கப்படுகிறதோ அப்போதுதான் அது உயிர்த்து செயல்புரிகிறது. ஆகவே இந்த உடலுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து இறைவனை உதாசீனம் செய்பவர்கள் புத்திசாலிகளாக, புத்திமான்களாக இருக்க முடியாது (புத்தி ஹீனன்).

சுருங்கக் கூறின் நாம் குருவின் பணிவிடைகளைச் செய்வதன் மூலம் நமது மனதைத் தூய்மைப்படுத்த வேண்டும். மனது தூய்மையானவுடன், கடவுளின் புகழையும் மகிமையையும் அது பிரதிபலிக்கின்றது. அதன் பின்னர், இந்த மனோபாவத்துடன், நாம் பகவானின் புகழையும் மகிமையையும் பாடினால் நாம்

தேடுவதனைத்தையும் - உயர்ந்த பண்புகளையும் (தர்மம்) சகலவித செல்வங்களையும் (அர்த்தம்) இன்பங்களையும் (காமம்) முக்தியையும் (மோட்சம்) அடைகிறோம். துக்கம் முடிவுக்கு வருகிறது. நமது அஞ்ஞானம் மறைந்து போகிறது. இது ஒரு பலமும் சக்தியுமிக்க வழிபாடு.

ஸ்ரீ ஹனுமான் (பவன குமாரன்) வாயுவின் புத்திரன், எந்த நேரமும் காற்று வீசிக்கொண்டு இருப்பதால், அது மிகச் சிறந்த ஒரு தூய்மையாக்கி ஆகும். அனைத்து ஜன்னல்களும் மூடப்பட்டிருக்கும் அறையொன்று காற்றோட்டம் இல்லாமல் புழுக்கமாகவும் அசௌகர்யமாகவும் விளங்கும். ஜன்னல்களைத் திறந்த மாத்திரமே, காற்று வீசி அந்த இடத்தைத் தூய்மையாக்குகின்றது. ஆகவே வாயு ஒரு மிகச் சிறந்த தூய்மையாக்கியாகக் கருதப்படுகிறது.அது போன்று, வாயுவின் புத்திரன் ஸ்ரீ ஹனுமானும் இடத்திற்கிடம் செல்வதுடன் தான் செல்லுமிடத்தையெல்லாம் தூய்மையாக்குகிறார். அவரை அறிபவர்கள் எல்லாம் தூய்மையடைகின்றனர். அது மட்டுமல்ல வாயு எப்போதும் மௌனமாக நமக்குச் சேவை செய்கிறது. சூரியன் நமக்குப் பகலில் சேவை செய்கிறது. சந்திரன் பூமியை இரவில் ஒளிரச் செய்கிறது. சூரியனும் சந்திரனும் உள்ள பொழுது அவை இருப்பது நமக்குத் தெரிகிறது. அவை நம் பார்வைக்கு இல்லாத போது அவை இல்லை என்பதையும் உணர்கிறோம். ஆனால் வாயுவோ நமக்கு இரவும் பகலும் சேவை செய்கிறது. அது நமக்குள்ளே சக்தியூட்டும் பஞ்சபிராணனாக இருக்கின்றது. அது இல்லாவிட்டால் நாம் இறக்க நேரிடும். நாம் காற்றைக் கண்ணால் பார்க்க முடியாது. அது நமக்கு மௌனமாக எவ்வித ஆரவாரமும் ஆடம்பரமும் இல்லாமற் சேவை செய்கிறது. இதனால் நாம் அதன் முக்கியத்துவத்தை உணர்வதில்லை. வாயு எவ்வித ஆணவமும் இல்லாமல். தன்னலமற்ற சேவையைப் புரிகிறது.

இதே போன்று, பவன குமாரனும் இராமருக்குச் சேவை புரிந்தார். அவரிடம் அகம்பாவமோ, கர்வமோ, திமிரோ, செருக்கோ, ஆணவமோ இல்லை. பகவானின் சேவையே அவரது இலட்சியம்.

அதை அவர் தன்னடக்கம், பணிவு மற்றும் பக்தியுடன் செய்தார். இந்த நற்பண்புகளைத்தான் நாமும் நம்முள்ளிருந்திக் கொள்ள வேண்டும். அமைதியாகவும், பணிவாகவும், பக்தியுடன், எவ்விதப் பலனையோ புகழ்ச்சியையோ எதிர்பாராமல் மற்றவர்களுக்கு நாமும் சேவை செய்வோமாக.

**சௌபாஈ :**

**ஜய ஹனுமான் ஞான குண ஸாகர,**
**ஜய கபீஸ திஹு(ம்) லோக உஜாகர**

**1. அறிவின், உயர்ந்த குணங்களின் கடலான ஹனுமானே உங்களுக்கு வெற்றி. மூன்று உலகங்களாலும் அறியப்பட்ட வானரத்தலைவரே உங்களுக்கு வெற்றி.**

“ஹனு” என்றால் “தாடை” அல்லது “கீழ்த்தாடை” என்று அர்த்தம். “ஹனுமான்” என்றால் தாடையை உடையவர் என்று அர்த்தம். அப்படியாயின் தாடையுடையவர்கள் அனைவரையுமே ஹனுமான் என்று அழைக்கலாமே! அனுமனது தாடை நடுவில் பிளவுபட்டு அவரது வாய் வீங்கியது போலிருக்கும். இது எப்படி நடந்தது? அவர் அதிகாலையில் பிறந்தார். பிறந்த சமயத்தில், உதித்துக் கொண்டிருந்த சூரியனைக் கண்டு அதனைப் பழுத்த பழம் என நினைத்தார். அவர் பிறக்கும் போதே பறக்கும் சக்தியைக் கொண்டிருந்ததால், சூரியனை நோக்கிப் பறந்து அதனை விழுங்கிவிட்டார். முழு உலகமும் இருளில் மூழ்கியது. இச்சிறிய குழந்தை சூரியனை விழுங்கியது எப்படி என்று ஒருவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

அப்போது, தேவர்களின் தலைவரான இந்திரன், தனது வஜ்ராயுதத்துடன் வந்தார். அவரது வஜ்ராயுதம் பிசகாதது, தவறாதது, அது யாரைத் தாக்குகிறதோ, அவர் உடனடியாக இறப்பது உறுதி. சூரியனை விடுவிப்பதற்காக, இந்திரன் தனது வஜ்ராயுதத்தால் அக்குழந்தையைத் தாக்கினார். வஜ்ராயுதம் குழந்தையின் தாடையில் தாக்கிற்று. ஆனால் அவர் சர்வ சக்திமான். ஆகையால், இறக்கவில்லை என்றாலும் பூமியில் விழுந்து மூர்ச்சை அடைந்தார்.

சூரியன் விடுவிக்கப்பட்டார். இதனை அறிந்த வாயு பகவான் சினமுற்றுக் காற்றோட்டத்தை நிறுத்தினார். காற்றில்லாத காரணத்தினால் எல்லோரும் பீதியடைந்தனர். அனைவரும் வாயு பகவானைத் துதிக்கத் தொடங்கினர். அனைத்து தேவர்களும் அவரிடம் மன்னிப்பு கோரினர். வாயு பகவானும் – "நீங்கள் அனைவரும் உங்களிடமிருக்கும் சக்தியையும் உயர்ந்த பண்புகளையும் எனது மகனுக்கு கிடைக்கும்படி அருளி அவனை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று கூறினார். அவர்கள் அனைவரும் அதற்கு இணங்கினர். இதுதான் ஹனுமானுக்கு அனைத்து பலமும் சக்தியும் வந்த வரலாறு.

இந்திரனின் பலம் வாய்ந்த வஜ்ராயுதத்தின் தாக்குதலையும் தாங்கிக் கொள்ளும் சக்தி அனுமனுக்கு இருந்தது. துளஸீதாஸர், "ஸ்ரீ ஹனுமான் பலம் வாய்ந்தவர் அவர் தனது பலத்தை பகவானினதும் மற்றையோரினதும் சேவைக்காகப் பயன்படுத்துபவர்" என்கிறார். பலம் உள்ள பலர் தமது பலத்தை மற்றையோரை அடிமைப்படுத்தி தாங்கள் சர்வாதிகாரிகளாக வருவதற்குப் பயன்படுத்துவர். ஆனால் மாருதியோ தனது பலத்தை ஒருபோதும் துஷ்பிரயோகம் செய்ததில்லை.

"ஞான குண சாகர," என்றால் ஞானத்திலும், குணத்திலும், கடல் போன்றவர். சாதாரணமாகச் சிறிதளவு அறிவுடனோ அல்லது பல்கலைக்கழகப் பட்டத்தைப் பெற்ற பின்னரோ பலர் மிகவும் கர்வம் கொள்கின்றனர். அவர்கள் தம்மை மற்றவர்களிலும் உயர்வாகக் கருதுவர். ஆனால் ஹனுமானின் அறிவோ, உயர்ந்த பண்புகளுடன் கூடியது. ஆகவே கற்றவர்களிலேயே மிகவும் சிறந்தவராக அவர் கருதப்படுகிறார் (புத்திமான் வரிஷ்ட்டாம்). பணிவு, தன்னடக்கம், நற்பண்பு என்பன உயர்ந்த குணங்களாகும். அவரோ இந்த உயர்ந்த குணங்களின் வடிவம். அறிவிலேயே சிறந்தது தன்னறிவு எனப்படும் ஆத்ம ஞானமாகும். இவரிடம் இதுவும் உண்டு. இராமபகவான் ஒரு முறை அவரிடம், "உனக்கும் எனக்கும் உள்ள உறவு என்ன?" என்று வினவினார். அதற்கு "எனது உடலைப் பொறுத்த வரையில் நான்

உங்கள் சேவகன், ஒரு ஜீவனாக நான் உங்களில் ஒரு பகுதி, ஆனால் ஆத்மாவாக இருவரும் ஒன்று. இதுதான் எனது திடமானதும் முடிவானதுமான நம்பிக்கை'' என்றார் அவர். மேலும் ஸ்ரீ ஹனுமான் அனைவருடனும் அவரவரின் கௌரவம் மற்றும் தரத்திற்கேற்ற விதத்தில் பழகுவதில் சமர்த்தர். அவர் அனைத்தும் கற்றறிந்த அறிஞர். அவர் ஒன்பது விதமான ஸமஸ்கிருத இலக்கணங்களையும் அறிந்திருந்தார். (நவ வ்யாகரண பண்டித:) என்று வால்மீகி இராமாயணம் கூறுகிறது. அப்படிப்பட்ட அறிவாளியாக இருந்தும், அடக்கம், பணிவு என்பவற்றின் மகுடமாயிருந்தார். "ஜய கபீச" என்றால் வானரத் தலைவருக்கு வெற்றி என்று அர்த்தம். "கபீ" என்றால் வானரன். "ஈச" என்றால் தலைவர் அல்லது பிரபு என்று அர்த்தம். அவரோ வானரர்களின் முடிசூடிய மன்னரல்லர். அப்படியாயின், எப்படி அவரை வானரர்களின் தலைவரென அழைக்கலாம்? வானரர்களின் முடிசூடிய மன்னனாக முதலில் வாலியும் பின்னர் சுக்ரீவனும் இருந்தார்கள். ஆனால் ஸ்ரீ அனுமனோ தலைவர்களை உருவாக்கும் வல்லமை பெற்றவர். தமையன் வாலிக்குப் பயந்து சுக்ரீவன், இடம்விட்டு இடம் ஓடிக்கொண்டிருந்த காலத்தில் ஹனுமானின் தைரியமும் வீரமுமே அவனுக்குப் பலத்தைக் கொடுத்தது எனலாம். மேலும், உண்மையான மன்னன் யார்? ஒரு நிலப்பரப்பையோ அரசையோ ஆட்சி புரிபவனா? அரசுரிமையை வாரிசு என்ற முறையில் அடைபவனா? பெரும்பான்மையினரின் வாக்கினால் பதவிக்கு வருபவனா? அல்லது அனைவரின் இதயத்தையும் ஆட்சி புரிபவனா? முடிசூடிய மன்னன் ஒருவன் அவனது பிரஜைகளினால் முடிசூட்டப்பட்டவனாக இருக்கலாம். ஆனால், உண்மையான தலைவனோ முடிசூடாதவனாக இருந்தாலும் கூட அனைவராலும் மதித்து வணங்கப்படுபவன். ஆகவே வானரர்களின் முடிசூடா மன்னன் ஸ்ரீ ஹனுமானே ஆவார்.

மேலும் "கபீ" என்றால் "மெய்யின்பத்தைத் தரும் உண்மை (பிரம்மன்) எனும் இன்பத்தை அருந்துபவன்." "க" - இன்பம் (ஸுகம்)

“பீ” குடிப்பவன். “எது முடிவுற்றதோ அதுவே இன்பம், முடிவுள்ளவற்றில் இன்பம் இல்லை” என்று சாந்தோக்ய உபநிடதம் கூறுகிறது. ஆகவே இன்பம் எனும் உண்மையை அறிந்து அதில் திளைப்பவனை “கபீ” எனலாம். ஸ்ரீ ஹனுமான் ஒரு சாதாரண வானரமல்ல. அவரை நாம் வானரத் தெய்வம் என்று கூறி அவமதித்தலாகாது. அவர் வானர ரூபத்தில் இருந்தாலும். அவர் ஒரு பிரம்மஞானி, ஞானத்திலேயே உயர்ந்த ஆத்மஞானத்தை உடையவர்.

“திஹு லோக உஜாகர” என்றால் மூவுலகிலும் அறியப்பட்டவர். அவரது புகழெனும் ஒளி எங்கும் பரவியிருக்கின்றது. அவரை அனைவரும் மதிக்கின்றனர்.

**ராமதூத அதுலித பல தாமா**
**அஞ்சனி புத்ர பவனஸுத நாமா**

2. இராமபகவானின் தூதரே! நிகரற்ற பலத்திற்கு இருப்பிடமே! அஞ்சனி புத்திரனே! வாயு குமாரனென்ற பெயரை உடையவரே!

ஸ்ரீ ஹனுமான் இராமபிரானின் தூதர். ஒரு தூதனின் வேலை கடினமானது. செய்தியை உரிய நேரத்தில், உரியவாறு சேர்ப்பிக்க வேண்டும். ஹனுமானைப் பொறுத்தவரையில் அவரது வேலை மேலும் கடினமானதாக இருந்தது. எதிரியான இலங்கை அரசன் இராவணனிடம் அவர் செய்தியைச் சேர்பிக்க வேண்டியிருந்தது. இம்முயற்சி மரணத்திற்கூட முடியலாம். அதே நேரத்தில், அவர் தன்னை அசுர காவலாளிகளிடம் காட்டிக் கொள்ளாமல் சீதையிடம் இரகசியமாகச் செய்தி ஒன்றைச் சேர்ப்பிக்க வேண்டியும் இருந்தது. ஆனால் எடுத்த காரியத்தை முழுமையான பக்தியுடனும் தைரியத்துடனும் சரிவரச் செய்து முடிப்பதுதான் அவரின் பெருமை.

அளவற்றதும் நிகரற்றதுமான (அதுலித) பலத்தின் சிகரம் அவர். ஹனுமானிடம் நாம் முதலிற் காண்பது அவரது அமானுஷ்ய சக்தி. அவரது தாயாரின் பெயர் அஞ்சனி - இது தூய்மையான புத்தியைக் குறிக்கும். ஆகவே அவர் தூய்மையான புத்திக்குப் பிறந்தவர்,

தூய்மையான இதயத்தையுடைய தாயின் மகன். "அஞ்சனம்" அழகுக்காகவும் அழகை அதிகரிப்பதற்காகவும் கண்ணில் தடவப்படும் ஒரு பொருளைக் குறிக்கும். "அஞ்சனம்" என்பது இந்த உலகே இராம பகவான்தான் என அறிந்து கொள்ள உதவும் குருவின் கிருபை அல்லது அருளைக் குறிக்கும். புத்ரன் என்றால் தனது பெற்றோரை நரகத்திற்குப் போகாமல் காப்பாற்றுபவன் என்று பொருள் (பும் நாம நரகாத் த்ராயதே இதி புத்ர). சாஸ்திரங்களில் பல்வேறு வகையான சொர்க்கங்களும் நரகங்களும் விவரிக்கப்பட்டுள்ளன. அதில் ஒன்றுதான் "பும்" எனப்படுவது. உண்மையான மகனொருவன் தன்னைப் பெற்றவர்களைத் துன்பங்களிலிருந்தும் வேதனைகளிலிருந்தும் காப்பாற்றுகிறான். ஹனுமான் அப்படிப்பட்ட ஒரு மகன். அவர் தனது பெற்றோரைப் பாதுகாத்தது மட்டுமல்ல, அவர்களுக்குப் பெருமையும் சேர்த்தார். அவர் இல்லாவிட்டால் அஞ்சனியை யாருக்குதான் தெரிந்திருக்கும்?

**மஹாபீர பிக்ரம பஜரங்கீ**
**குமதி நிவாரஸுமதி கே ஸங்கீ**

**3. மஹா வீரரே, அளவற்ற பராக்கிரமம் உடையவரே, இந்திரனின் வஜ்ராயுதத்தைப் போன்ற பலமிக்க உடலை உடையவரே, எனது தீய மதியை நீக்கி நல்லவர்களின் சேர்க்கையைத் தந்து அருள்வீர்.**

"பீர" என்றால் தைரியம், பலம் மற்றும் பராக்கிரமம் என்று அர்த்தம். ஸ்ரீ ஹனுமானோ "மஹாபீர" - மிகவும் உன்னதமானதோர் வீரர். இராம பகவானே அவரது புகழைப் பாடியுள்ளார். கவிஞர்கள், எழுத்தாளர்கள் அல்லது வேறு சிலர் ஒரு தைரியமான வீரனைப் புகழலாம். ஆனால் கடவுளே ஒருவரைப் புகழ்வதானால், அப்படிப்பட்டவர் சாதாரணமானவராக இருக்க முடியாது.

பொதுவாக "வீர" என்பது போர்க்களத்தில் தைரியத்தையும் வீரத்தையும் காட்டுவதைக் குறிக்கும். ஐந்து வகையான வீரம் இருப்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றன :

1. **தீயாகவீரம் அல்லது தர்மவீரம்** - தியாகத்திலும் மற்றும் இன்பம் தருவதைத் துறத்தலிலும் வீரம். பலசமயங்களில் ஒருவன் தர்மத்திற்காகத் தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது. எவன் ஒருவன் அப்படியான தர்மத்தின் வழி வாழ்கிறானோ அவனே தியாகவீரன் என்று அழைக்கப்படுகிறான்.

2. **தயாவீரம்** - கருணை அல்லது காருண்யத்தில்வீரம் மற்றவர்களின் துயரங்களைத் தாங்க முடியாத ஒருவன் அவர்களை அத்துன்பத்தில் இருந்து விடுவிக்கத் தன்னால் இயன்றதைச் செய்வது தயா வீரம்.

3. **வித்யாவீரம்** - அறிவிலும் கல்வி கற்பதிலும் வீரம்.

4. **தானவீரம்** - தானம் செய்வதில் வீரம். ஸ்ரீ ஹனுமான், தர்மம், அர்த்தம், காமம் மற்றும் மோட்சம் என நாம் எதைக் கேட்டாலும் கொடுப்பவர். ஆனால் அவர் அளிக்கக் கூடிய மிகச் சிறந்த கொடைதான் இராம பக்தி.

5. **ரணவீரம்** - போர்க்களத்தில் வீரம்.

இவ்வுலகில் நாம், இந்த ஐந்தில் ஏதாவது ஒரு வீரத்தை உடையவர்களைக் காணலாம். ஒருவன் போரில் வீரனாக இருக்கலாம், ஆனால் அவனிடம் அறிவோ கருணையோ இராது. அனுமனிடம் இந்த ஐந்து விதமான வீரமும் இருந்ததால் அவர் "மஹாபீர" என்று அழைக்கப்பட்டார். இந்த ஐந்தையும் ஒருவர் கடவுளின் சேவைக்காகப் பயன்படுத்தினாரானால், அப்படிப்பட்டவர் ஒப்புயர்வற்ற வீரன் (பரமவீர) என்று அழைக்கப்படுகிறார். இராமர் தனக்கு எல்லாவிதத்திலும் சேவை புரிந்த அனுமனிடம் நான் உன்னிடம் எப்போதுமே கடன்பட்டிருக்கின்றேன். என்னால் இந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க இயலாது என்று நன்றியுடன் கூறுகிறார். "பிக்ரம" என்பது. பராக்கிரமமும் வலிமையும் மிக்கவர் என்று பொருள்படும்.

ஸ்ரீ ஹனுமான் "பஜரங்கீ" என்றும் அறியப்படுகிறார். இதன் மூல ஸமஸ்கிருதப் பதம் "வஜ்ர-அங்கி" ஆகும். "வஜ்ர அங்கி" என்ற பதம் இலகுவில் உச்சரிக்கக்கூடிய அவதி மொழிச் சொல்லாக இங்கே மருவி

இருக்கின்றது. அனுமனின் பலம் பொருந்திய உடல், இந்திரனின வஜ்ராயுதத்தின் தாக்குதலையும் தாங்கிக் கொள்ளும் பலம் பொருந்தியது.

"குமதி நிவார ஸுமதி கே சங் குமதி" என்றால் நமது மனதின் அனைதது இழிவான, துயரத்தைத் தரக்கூடிய எதிர்மறையான போக்குகள் என்று அர்த்தம். நிவார என்றால் அழித்தல் அல்லது நீக்குதல் என்று அர்த்தம். மனதில் இருக்கும் மாயை நீக்கப்படல் வேண்டும். "சுமதி கே சங்கீ" என்றால் எங்களுக்கு பிரகாசமாக புத்தியைத் தரவேண்டும் அல்லது " நல்ல புத்தி உள்ளவரின் சேர்க்கை உடைய" என்று அர்த்தம். அவர் நல்ல எண்ணங்களைக் கொடுத்து தீய எண்ணங்களை நீக்குகின்றார். இதற்கு அவர் தீயவரை அழித்து நல்லோர்க்கு சகாயம் புரிபவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

**கஞ்சன பரன பிராஜ ஸுபேஸா**
**கானன குண்டல குஞ்சித கேஸா**

4. உங்கள் பொன்னிற உடல் அழகான கவர்ச்சிகரமான அடையுடனும் காதில் உள்ள பளிச்சிடும் குண்டலங்களுடனும் சுருண்ட கேசத்துடனும் ஒளிர்கிறது.

**ஹாத பஜ்ர ஔ த்வஜா பிராஜை**
**காந்தே மூஞ்ஜ ஜனேஊ ஸாஜை**

5. உங்கள் கைகளில் வஜ்ராயுதமும், கொடியும் இருக்கின்றன. உங்களின் தோள்களில் மூஞ்சா எனப்படும் புல்லினால் ஆன பூணூல் இருக்கின்றது.

அனுமன் இந்திரனின வஜராயுதத்தைப்போல பலம் மிக்கதும், எவர் மது பிரயோகிக்கப்படுகிறதோ அவரை அழிக்கவல்லதுமான கதாயுதத்தைத் தனது கையில் வைத்திருப்பவர். "கதா" என்ற பதம் "பேசுதல்" எனும் அர்த்தமுள்ள "கத" எனும் சொல்லில் இருந்து வந்தது. யுதம் – போர்க்களத்தில் எதிரிகளை அடிக்கும, சொற்கள் அறிவின் வடிவாய் மனத்தின் அறியாமையையும் ஆணவத்தையும்

அழிக்கும். "த்வஜா பிராஜை" - அவர் இராம பகவானின் கொடியைக் கையில் வைத்திருப்பவர். இது இராமரை அவர் எப்போதும் மனதில் நினைப்பவர் என்பதையும் எப்போதுமே மரியாதை செய்பவர் என்பதையும் குறிக்கும். "த்வஜா" என்றால் வெற்றி என்றும் பொருள் உண்டு. அவர் எப்போதுமே "இராம பகவானுக்கே வெற்றி" என்று முழங்குபவர். அக்காலத்தில் ஒருவர் பகைவனா அல்லது நண்பனா என்று அடையாளம் தெரிந்து கொள்ள இரதங்களில் கொடியைப் பறக்கவிட்டனர். ஸ்ரீ ஹனுமானின் உடலும் ஒரு இரதத்தைப் போல் இடத்திற்கு இடம் சென்றது, பறந்தது, தாவியது, ஆகவே அவர் இராம பகவானின் கொடியை எப்போதுமே வைத்திருந்து இராமரின் புகழையும் வெற்றியையும் முழங்குபவர். கோஸ்வாமி துளஸீதாஸ், "ஸ்ரீ ஹனுமான் உண்மை, நன்நடத்தை மற்றும் கடவுள் நம்பிக்கை என்பவற்றின் சின்னமான கொடியை எப்போதும் வைத்திருப்பவர்" என்று கூறுகிறார்.

"காந்தே மூஞ்ஜ ஜனேஊ" - ஸாஜை - ஜனேஊ என்பது காயத்ரி மந்திர உபதேசம் பெற்ற ஒருவர் அணியும் பூணூலாகும். இது தற்சமயம் பருத்தியிலானதாக இருந்தாலும், ஆதியில் இது மூஞ்சா எனப்படும் புல்லினால் செய்யப்பட்டதாகையால் அது "மூஞ்ஜ ஜனேஊ" எனப்படுகிறது. ஒருவருக்கு ஐந்திற்கும் - பத்திற்கும் இடைப்பட்ட வயதில் இந்தப் பூணூலை அணியும் உபநயனம் எனும் சடங்கு நடக்கின்றது. இது விளையாட்டு மிக்க சிறுபிள்ளைப் பிராயம் முடிந்துவிட்டது என்பதை குறிக்கின்றது. இதன் பின்னர் அவர் கல்வியும் ஒழுக்கமும் மிகுந்த வாழ்க்கையை ஆரம்பிக்க வேண்டும். பூணூலில் இருக்கும் முடிச்சு "பிரம்மன்" எனப்படும் பரம்பொருளைக் குறிக்கும். ஒன்றுடன் ஒன்று பிணைந்திருக்கும் மூன்று நூல்களும் - ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் மூன்று குணங்களைக் குறிக்கும். இம் மூன்று குணங்களும் பரம்பொருளை அடிப்படையாகக் கொண்டன. இந்த முடிச்சைப் பிடித்தவண்ணம்தான் காயத்ரி மந்திரத்தை உச்சரிக்க வேண்டும் என்பது மரபு. ஹனுமான் இந்தப் புனித நூலைத் தனது

தோளில் அணிந்த வண்ணம் இருக்கிறார். அவரது கவனம் எப்போதும், அந்த உண்மை எனும் பரம் பொருளிலேயே நிலைத்திருக்கிறது.

**ஸங்கர ஸுவன கேஸரீ நந்தன**
**தேஜ ப்ரதாப மஹா ஜக பந்தன**

6. சிவனின் புதல்வரே, கேஸரியின் புதல்வரே உங்கள் பிரகாசமும், வீரமும் மகத்தானது. இதன் காரணமாக உலகில் உள்ள அனைவருமே உங்களை மதித்துப் போற்றுகின்றார்கள்.

"ஸங்கர ஸுவன கேஸரீ-நந்தன" - சிவபெருமானின் மகன். கேஸரீயின் புத்திரன். "இவர் எத்தனை பேரின் புத்திரன்?" என்று ஆச்சரியத்துடன் சிலர் கேட்கலாம். வாயுபகவான், சிவபெருமான், மற்றும் கேஸரீ? இராவணனின் அட்டூழியங்கள் அதிகரித்து, அவன் உலகுக்கு நாசம் விளைவித்துக் கொண்டிருந்த காலத்தில், அனைத்து தேவர்களும் முனிவர்களும் விஷ்ணு பகவானைத் துதித்தனர். அவர்கள் "இராவணனின் அட்டூழியங்களை இதற்கு மேலும் பூமி தாங்காது" என்றும் "பகவான் எழுந்தருளி அனைவரையும் காத்தருள வேண்டும்". என்றும் கேட்டுக்கொண்டனர். பகவானும், "நான் இராமனாக அவதாரம் எடுத்து இராவணனின் கொடிய ஆட்சியிலிருந்து உலகை விடுவிப்பேன்" என்று கூறினார். பிரம்மாவும் அனைத்துத் தேவர்களை நோக்கி "விஷ்ணு பகவான் பூமியில் அவதாரம் எடுப்பதால், நாம் அனைவரும் அவருக்குச் சேவை புரிய வேண்டும். அவர் மனித அவதாரம் எடுப்பதால், நாம் அவரை விடத் தாழ்ந்த உருவத்தில் அவதரிக்க வேண்டும், நாம் அனைவரும் வானரர்களாக அவதரிக்க வேண்டும்". என்று கூறினார். ஆகவே இராமருக்குச் சேவை செய்த வானரர்கள் தேவர்களே அன்றி (வாலி இந்திரனின் புத்திரன், சுக்ரீவன் சூரியனின் புத்திரன்) வேறு எவருமில்லை. வாயு பகவான் - அஞ்சனிக்கும் கேஸரீக்கும் தனது தேஜஸைக் கொடுத்தருளினார். அச்சக்தி ஸ்ரீ ஹனுமான் பிறந்ததும் அவருக்குச் சென்றது. ஆகவே அவர் வாயுபுத்திரன் என

அழைக்கப்படுகிறார். சிவபெருமானும் விஷ்ணு பகவானும் சிறந்த நண்பர்கள். ஒருவர் அவதாரம் எடுக்கையில் மற்றவர் அவருக்குச் சேவை செய்ய விரும்புவார். சிவபெருமான், விஷ்ணு பகவான் இராம அவதாரம் எடுக்கும் போது நான் அவருக்குச் சேவை செய்ய வேண்டும். நான் அவரது குடும்பத்தில் ஒருவராகப் பிறந்தால் அவர் எனது சேவையைப் பெறத் தயங்குவதுடன் நில்லாது, எனக்குச் சேவை செய்யவும் நினைக்கலாம். ஆனால் நான் தாழ்ந்த ஒரு உருவம் எடுத்தால் - ஒரு வானரனாக - இந்தப் பிரச்சினை எழாது என்று எண்ணினார். இப்படி எண்ணிய சிவபெருமான், இராம பகவானுக்குச் சேவை செய்யும் நோக்குடன் தனது தேஜஸை ஸ்ரீ ஹனுமானுக்கு அளித்தார். ஆகவே, ஹனுமான் சிவபெருமானின் குமாரன் என்றும் சிவபெருமானின் அவதாரம் ( ருத்ர அவதாரம் ) என்றும் அறியப்படுகிறார்.

அவரது தந்தையின் பெயர் கேஸரீ - கேஸரீ என்றால் சிங்கம், சிங்கத்தைப் போன்று பயமற்ற, வீரம்மிக்க, தைரியம்மிக்க, பலம்மிக்க கேஸரீக்குப் பிறந்தவர். இப்பண்புகளை அவர் தகப்பனிடம் இருந்து பெற்றுள்ளார். அதுமட்டுமல்ல, அவர் வாயுபகவானைப் போன்று தன்னிடம் வருபவர்களைத் தூய்மைப்படுத்துபவர். சிவபெருமானைப் போன்று அனைவருக்கும் அருள் புரிபவர். ஆகவே ஸ்ரீ ஹனுமான் இம்மூவருக்கும் உகந்த புத்திரன் எனலாம்.

"தேஜ ப்ரதாப மஹா ஜக பந்தன" அவரது தேஜஸ் அல்லது புகழ் மகத்தானது, முழு உலகத்தினாலும் போற்றப்படுவது. அனைவரும் அவரது புகழைப் பாடுகின்றனர்.

**பித்யாவான குனீ அதி சாதுர**
**ராம காஜ கரிபே கோ ஆதுர**

7. நீங்கள் அறிவுமிக்கவர், உயர்ந்த குணங்களை உடையவர், சாதுர்யமிக்கவர், இராமரின் காரியத்தைச் செய்வதற்கு எப்போதுமே தயாராக உள்ளவர்.

"பித்யாவான" கல்விமான், ஞானி. "குனீ "- உயர்ந்த பண்புகளை உடையவர். "அதி சாதுர" - மிகவும் புத்தி சாதுர்யம் உள்ளவர். இவ்வுலகில் அறிவும் சக்தியும் மிக்கவர்கள் பலர் இருந்தாலும் அவர்களது சக்தியெல்லாம் உலக விஷயங்களில் விரயமாகின்றது. அவர்களை ஆன்மீகம் சம்பந்தமான ஏதாவது ஒன்றை அல்லது மற்றவர்களுக்கு உதவும் காரியம் ஒன்றைச் செய்யுமாறு கூறினால் - அவர்களைக் கோவிலுக்குச் செல்லுமாறோ அல்லது தான தருமக் காரியங்களைச் செய்யுமாறோ கூறினால், உடனேயே அவர்கள் அக்காரியங்களைச் செய்ய முடியாமைக்கு ஏதாவது சாக்குப்போக்குக் கூறித் தட்டிக் கழித்துவிடுவார்கள். டென்னிஸ் விளையாட அதிகாலையில் எழுவார்கள். ஆனால் தியானம் செய்வதற்கல்ல. ஹனுமானோ, பகவானின் காரியங்களைச் செய்வதற்கு எப்போதுமே தயாராக இருந்தவர். இந்திரஜித்தின் பாணத்தினால் தாக்கப்பட்டு இலக்குவன் மூர்ச்சை அடைந்திருந்த வேளை அது. அவரைக் காப்பதற்காக உயிர் காக்கும் சஞ்சீவினி மூலிகையைக் கொண்டு வர வேண்டி இருந்தது. வாயு குமாரன் கொதிக்கும் எண்ணெயில் கடுகு பொரிய எடுக்கும் நேரத்தில் தான் சஞ்சீவினி மூலிகையுடன் வந்து விடுவேன் என்று கூறினார். அவர் இமயமலைக்குச் சென்ற போது அவரால் சஞ்சீவினி மூலிகையை அடையாளம் காண முடியாததால் அந்த மலையையே தூக்கி வந்தார். எப்போதும் தயாராகவும் விழிப்புடனும், அர்ப்பணிப்புடனும், பக்தியுடனும் தொடர்ந்தும் சேவை செய்தார் ( ராம காஜ கரிபே கோ ஆதுர ).

**ப்ரபு சரித்ர ஸுனிபே கோ ரஸியா**
**ராமலகன ஸீதா மன பஸியா**

8. நீங்கள் எப்போதும் பிரபுவின் (இராமரின்) புகழைக் கேட்டு இரசிப்பவர். உங்கள் இதயத்தில் இராமர், இலக்குவன், சீதை ஆகியோர் எப்போதும் குடியிருப்பர்.

ஹனுமான் இராமரின் புகழையும் மகிமையையும் கேட்பதில் ஆனந்தம் அடைபவர். பொதுவாக நமது இயல்பு இதுவல்ல. ஒரு மனிதன் பிரபலமடையும்போது, மக்கள் தன் புகழைப்பற்றிப் பேச வேண்டும் என விரும்புகிறான். அவன் மற்றவர்களின் புகழைக் கேட்க விரும்புவதில்லை. கடவுளின் புகழைப்பற்றிப் பேசவே விரும்புவதில்லை. ஆனால் மாருதியோ எப்போதும் பகவானின் புகழைப் பாடுவதிலும், மற்றவர்கள் இராமரின் உயர்ந்த பண்புகளையும் புகழையும் பாடுவதைக் கேட்பதிலும் இலயித்து இருப்பவர். இராமர், இலக்குவன் மற்றும் சீதா தேவி ஆகியோர் அவரது இதயத்தில் வசிக்கின்றனர். இராமபிரான் ஞானத்திற்கும், சீதாதேவி பக்திக்கும், இலக்குவன் தியாகம் மற்றும் வைராக்கியத்திற்கும் அடையாளம். அனுமனிடம் ஞானம், பக்தி, தியாகம், வைராக்கியம் எனும் இந்த நான்குமே உண்டு.

**ஸூஷ்ம ரூபதரி ஸியஹி(ம்) திகாவா**
**பிகட ரூபதரி லங்க ஜராவா**

9. மிகவும் சிறிய உருவம் எடுத்து சீதையிடம் உங்களை வெளிப்படுத்தினீர்கள். உக்கிரமான உருவமெடுத்து இலங்கையைக் கொளுத்தினீர்கள்.

தான் விரும்பியதுபோல் சிறியதாகவோ அல்லது பெரியதாகவோ உருவம் எடுக்கும் சக்தி இராம தூதனுக்கு உண்டு. அவர் சீதையைச் சந்திக்கச் சென்ற போது, காவலர்களிடம் பிடிபடாமல் சீதையை அணுகுவதற்குத் தனது உருவத்தை மிகச் சிறியதாக்கிக் கொண்டார். பொதுவாகப் பெரியவர்கள், பெரிய பதவிகளில் இருப்பவர்கள் தம்மைச் சிறிதாக்கவோ தாழ்த்திக் கொள்ளவோ விரும்புவதில்லை. சிறிய சாதாரண விஷயங்களை ஏனையோர் முன்னிலையிற் செய்வதற்கு அவர்களது கர்வம் அனுமதிக்காது. ஆனால் ஸ்ரீ ஹனுமானுக்கோ அந்த ஆணவம் சிறிதளவும் இல்லை. இராமரின் காரியத்தை முடிப்பதற்குத் தேவையானவற்றைச் செய்வார், இதுதான் அவருக்கு எல்லாவற்றிலும் முக்கியம்.

இராவணனின் இலங்கையை எரிப்பதற்கு அவர் பெரிய உருவத்தை எடுத்தார். இதற்குப் பல அர்த்தங்கள் உண்டு. அவர் இராவணனின் அரண்மனையையும் கோட்டையையும் அழித்தார். இலங்கை என்பது உலக இன்பங்கள், ஒருவரின் சொத்துக்கள் மற்றும் கட்டுப்பாடற்ற வாழ்க்கை என்பவற்றைக் குறிக்கிறது. இராமாயணம் நடைபெற்ற காலப் பகுதியில் இலங்கையில் வாழ்ந்தவர்களில் பெரும்பான்மையினர் அசுரர்கள். உடம்புதான் தாம் என நினைக்கும் அவர்கள், உடம்பிற்குச் சுகத்தையும் இன்பத்தையும் தரும் காரியங்களையே செய்தார்கள். ஆகவே இவர் புலனின்பங்களுக்கும் சிற்றின்பங்களுக்கும் அதீத முக்கியத்துவம் கொடுத்த தேசத்தையே அழித்தார். மேலும் நான் இந்த உடம்பு அல்ல, உடம்பினைத் திருப்தி செய்வதற்கும் புலனின்பங்களிலும் சிற்றின்பங்களிலும் ஈடுபடுவதற்குமல்ல இவ்வாழ்க்கை என்ற சரியான ஞானம் அவருக்கு இருந்தது. அனுமனால் ஏற்றி வைக்கப்பட்ட இந்த ஆத்ம ஞானம் எனும் நெருப்பானது, தவறான வாழ்க்கை முறை, தவறான எண்ணங்கள், உடம்புதான் நான் என்ற எண்ணம் மற்றும் பந்தம் என்பவற்றை எரித்து அழித்தது. இந்நெருப்பிற்குச் சீதாதேவியின் சோகம் என்றும் அர்த்தம் கொள்ளலாம். நல்லவருக்குத் துன்பம் செய்தால் அவர் அனுபவிக்கும் வேதனை, துன்பம் விளைவித்தவரை அழித்து விடும். சீதா தேவியாரின் வேதனை எனும் நெருப்பு இலங்கையை அழித்துச் சாம்பலாக்கியது.

**பீம ரூபதரி அஸுர ஸம்ஹாரே**
**ராமசந்த்ர கே காஜ ஸ(ம்) வாரே**

10. பயங்கர உருவம் எடுத்து அசுரர்களை அழித்து, இராமரின் காரியத்தைச் செய்து முடித்தீர்கள்.

**லாய ஸஜீவன லகன ஜியாயே**
**ஸ்ரீ ரகுவீர ஹரஷி உர லாயே.**

11. சஞ்சீவனியைக் கொணர்ந்து இலக்குமணருக்கு உயிரூட்டினீர்கள். இராமபிரான் மகிழ்ச்சியில் உங்களை மார்புடன் தழுவிக்கொள்ளச் செய்தது.

இந்திரஜித்தின் பாணம் இலக்குமணனைத் தாக்கி அவரை நினைவிழக்கச் செய்த போது ஸ்ரீ ஹனுமான் உயிர் காக்கும் சஞ்சீவனி மூலிகையைக் கொணர்ந்து இலக்குவனைக் காப்பாற்றினார். இதனால் மகிழ்ந்த இராமர் ஹனுமானைத் தழுவிக் கொண்டார். பகவான் தனது பக்தனைத் தழுவும் போது, அவர் தனது இதயத்தைப் பக்தனின் இதயத்தில் வைக்கின்றார். ஆகவே நாம் பகவானைக் காண வேண்டுமானால், அவரின் உண்மையான பக்தன் ஒருவனின் இதயத்தில்தான் தேட வேண்டும்.

**ரகுபதி கீன்ஹீ பஹூத படாஈ**

**தும மம ப்ரிய பரதஹி ஸம பாஈ**

12. "என் சகோதரன் பரதனைப் போன்று, நீ எனக்கு மிகவும் பிரியமானவன்" என்று, உங்களை இராமர் உயர்வாகப் புகழ்ந்தார்.

**ஸஹஸ பதன தும்ஹரோ ஜஸ காவை**

**அஸ கஹி ஸ்ரீபதி கண்ட லகாவை**

13. "ஆயிரம் முகங்களையுடைய சேஷபகவானே உன் புகழைப் பாடுகிறார்". என்று, உங்களைத் தழுவிக்கொண்ட ஸ்ரீராமர் கூறினார்.

இராமாயணத்தில் வரும் கதாபாத்திரங்கள் அனைத்தும் இராமரை நினைத்த வண்ணம் இருந்தன. ஆனால் அவருக்கு மிகவும் பிரியமான - பரதனையே - இராமர் எப்போதும் நினைத்த வண்ணம் இருந்தார் என்று கூறப்படுகிறது. "எப்போதும் நான் மிகுந்த அன்புடன் நினைவில் வைத்திருக்கும் பரதனை நேசிப்பது போலவே உன்னையும் நேசிக்கிறேன்" என்று கூறுகிறார்.

"அஸ கஹி ஸ்ரீபதி கண்ட லகாவை" - ஸ்ரீபதி அல்லது லக்ஷ்மிபதி என்பது இராமரைக் குறிக்கும் (லக்ஷ்மி - விஷ்ணு பகவானின் துணைவியார்) பகவான் ஸ்ரீ ஹனுமானைத் தழுவி அவரைப் புகழ்ந்தார்.

"ஸகஸ பதன தும்ஹரோ ஜஸ காவை" - ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேஷன் உங்களது புகழைப் பாடுகிறார். ஆனால் உங்களது புகழைப் பாட ஆயிரம் வாய்களும் போதாது. மேலும் இலக்குவன் ஆதிசேஷனின் அவதாரம், அவர் ஸ்ரீ ஹனுமானின் புகழை எப்போதும் பாடினார்.

**ஸனகாதிக ப்ரஹ்மாதி முனீஸா**
**நாரத ஸாரத ஸஹித அஹீஸா**

14. ஸனகர் போன்ற முனிவர்கள், பிரம்மா முதலிய தேவர்கள் நாரதர், சரஸ்வதி மற்றும் ஆதிசேஷன்.

**ஜம குபேர திகபால ஜஹா(ம்) தே**
**கபி கோபிதக ஹி ஸகே கஹா(ம்) தே**

15. இயமன், குபேரன், அஷ்டதிக்குப்பாலகர்கள், கவிஞர்கள் மற்றும் பண்டிதர்கள் - இவர்களாலும் உங்கள் புகழை முழுமையாகப் பாட முடியவில்லை.

சனத்குமாரர்கள், பிரம்மா, இந்திரன், வாயு, குபேரன் (அனைத்துத் தேவர்கள்) மற்றும் முனிவர்களும் உங்களைப் புகழ்கிறார்கள். நாரதர் போன்ற தேவ ரிஷிகள், சாரதா (சரஸ்வதி – கல்வியைத் தரும் தேவதை) ஆகிய அனைவரும் உங்கள் புகழைப் பாடுகின்றனர். யம - மரண தேவதை - இயமன், குபேரன் - ஐசுவரியங்களுக்கு அதிபதி. அஷ்டதிக்குப்பாலகர்கள் - எல்லாத் திக்குகளினதும் காவல் தெய்வங்கள், மஹாகவிகள், அறிஞர்கள் மற்றும் பண்டிதர்கள் அனைவரும் உங்கள் புகழைப் புகழ்ந்து, உங்கள் பெருமையைப் பாடுகிறார்கள். உங்கள் பண்புகளோ எண்ணற்றது, எத்தனையைத்தான் நம்மால் குறிப்பிட்டுக் கூற முடியும்?

**தும உபகார சுக்ரீவஹி(ம்) கீன்ஹா**
**ராம மிலாய ராஜபத தீன்ஹா**

16. இராமபகவானைச் சுக்ரீவன் சந்திக்க வைத்து, அவனுக்கு அரசு கிடைக்க உதவினீர்கள்.

சுக்ரீவன் வானரர்களின் அரசனாக இருந்தான். அவனது சகோதரன் வாலி. (பாலி) சுக்ரீவனை நாட்டை விட்டுத் துரத்தியபின் வாலி அரசனானான். ரிஷியமுக பர்வதத்தில் வசித்த சுக்ரீவனைக் கொல்லும் முயற்சிகளை வாலி மேற்கொண்டான். இராமரும் இலக்குமணனும் வருவதைக் கண்ட சுக்ரீவன், அவர்களை தன்னைக் கொல்வதற்கு வாலியால் அனுப்பப்பட்டவர்கள் என்று பயந்தான். பலமும் தைரியமும் வீரமும் மிக்கவர்களாக அவர்கள் காணப்பட்டதால் அவன் பயந்து ஓடத் தொங்கினான். அப்போது ஹனுமான் கூறினார். “அவர்கள் யாரென அறிந்து கொள்ளாமல், நீ எதற்காகப் பயந்து ஓடுகிறாய்?” அவர்கள் உனது எதிரிகள் என்று நீயாகவே எண்ண வேண்டாம். இப்படியாக அவனுக்குத் தைரியமளித்துவிட்டு, ஹனுமான் இராம பகவானைச் சுக்ரீவனிடம் அழைத்து வந்து அவர்கள் இருவருக்கும் இடையில் நட்புறவை ஏற்படுத்தி வைத்தார். பின்னர் இராமர் - வாலியை வதம் செய்து, சுக்ரீவனை கிஷ்கிந்தைக்கு அரசனாக்கினார். பகவானே உயர்ந்த உண்மை. பகவானைச் சுக்ரீவனுக்கு அறிமுகம் செய்து வைத்ததன் மூலம், ஹனுமான் சுக்ரீவனுக்கு, உயர்ந்த உண்மை எனும் அறிவைக் கொடுத்தார். அவர் தனக்கென எதனையும் எதிர்பாராமல் எப்போதும் பகவானின் சேவகனாகவே இருக்கிறார். இதுதான் அவரது மகிமை.

**தும்ஹரோ மந்த்ர பிபீஷன மானா**
**லங்கேஸ்வர பர ஸப ஜக ஜானா**

17. உங்கள் ஆலோசனையைக் கேட்டு நடந்ததால் விபீஷணன் இலங்கைக்கு அரசனானது உலகறிந்ததே.

இங்கு, “மந்த்ர” என்பது ஆலோசனையைக் குறிக்கும். ஹனுமான் விபீஷணனை (இராவணனின் தம்பி) இராமரிடம் சரணடையுமாறு ஆலோசனை கூறினார். அவர் கூறியவாறு விபீஷணன் நடந்து கொண்டதும், இராமர் விபீஷணனை இலங்கையின் அரசனாக்கினார். ஸ்ரீராமன் சுக்ரீவனையோ அல்லது

விபீஷணனையோ அரசனாக்குவதற்குப் பிரதி உபகாரமாக தனது வேலையைச் செய்ய வேண்டும் எனக் கேட்கவில்லை. அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம் இறைவனிடம் சரணடைவது மட்டுமே. அதனால் அவர்கள் புகழ் பெற்றார்கள். பகவானைச் சரணடைந்தால், உலகாய மற்றும் ஆன்மீக சக்தி - இவை இரண்டுமே நமக்குக் கிடைக்கும் என்பது இதிலிருந்து நமக்குத் தெரிகிறது.

**ஜுக ஸஹஸ்ர ஜோஜன பர பானு,**
**லீல்யோ தாஹி மதுர பல ஜானு**

18. பல்லாயிரம் யோஜனைகளுக்கு அப்பால் இருந்த சூரியனை இனிய பழம் என்று நினைத்து அதனை நோக்கித் தாவினீர்.

அனுமன் பிறந்த போது, வானத்தில் உள்ள சூரியனைக் கண்டார். அதனைப் பழம் என்று நினைத்த அவர், அதனை நோக்கிப் பறந்து சென்று, அதனை விழுங்கிவிட்டார். இது எப்படி முடியும் என்று சிலர் கேட்கலாம்? அவரோ வாயுவின் புத்திரன், சூரியனோ நெருப்பு, வாயுவிலிருந்துதான் நெருப்பு வந்தது (சிருஷ்டிக் கிரமத்தில் சொல்லப்பட்டது இது) நெருப்பு எரியும் போது அது வாயுவுடன் சங்கமமாவதை நாம் காண்கிறோம். ஆகவே வாயுவினால் நெருப்பை ஏன் விழுங்க முடியாது? இதன் பின்னால் இருக்கும் வேதாந்தத்தின் விளக்கம் இதுவே. அது மட்டுமல்ல, ஸ்ரீ ஹனுமான் ஒரு சாதாரண வானரன் அல்ல. ஆகவே நாம் அவரது சக்தியையும் பலத்தையும் சந்தேகிக்கத் தேவையில்லை. யோகிகளிடமும் சித்தர்களிடமும் தேவர்களிடமும் இருக்கக் கூடிய எல்லாச் சக்திகளும் அவரிடமும் இருந்தன. அவரிடம் அஷ்ட சித்திகளும் இருந்தன (இதன் விபரம் பின்னால் தரப்படும்).

இந்தச் சம்பவத்திற்கு தரப்படும் மற்றுமோர் விளக்கத்தையும் பார்ப்போம். ஒரு குழந்தையின் மனது எப்போதும் தூய்மையானது. குழந்தையின் கற்பனா சக்தியோ அதிகமானது. குழந்தைகள் சூரியன், சந்திரன், நட்சத்திரம் என்பனவற்றைப் பற்றி எப்போதும் கேள்வி கேட்டுக் கொண்டே இருப்பார்கள். மழை எப்படிப் பெய்கிறது? நான்

எங்கிருந்து வந்தேன்? போன்ற கேள்விகளைக் கேட்பார்கள். குழந்தை வளர்ந்து பெரியவனாகும் வரை பணத்தைப்பற்றியோ அதிகாரத்தைப் பற்றியோ கேள்விகள் எதுவும் கேட்பதில்லை. இப்படியாகக் குழந்தையின் கற்பனை எப்போதுமே - கவனத்தை ஈர்த்துக் கொண்டிருக்கும் சூரியன் மேல் திரும்புகிறது. ஆனால் வளர்ந்தவர்களோ குழந்தையின் கேள்விகளுக்குச் சரியான விதத்தில் பதிலளிப்பதில் அக்கறை காட்டாமல் குழந்தையை வாயை மூடிக்கொண்டிருக்குமாறு கூறுவர். இங்கு இந்திரன் ஒரு சராசரி மனிதனையும், அவர் அனுமனை வஜ்ராயுதத்தால் தாக்கியது- குழந்தை அறிவைத் தேடி உயர முயற்சிக்கும் போது அதன் வாயை மூட ஒருவன் உபயோகிக்கும் சொற்களையும் குறிக்கும். இதனால்தான் ஸ்ரீ ஹனுமான் சூரியனை விடுவிக்கும் வரை உலகம் இருளில் மூழ்கியது.

**ப்ரபு முத்ரிகா மேலி முக மாஹீ(ம்)**
**ஜலதி லாந்தி கயே அசரஜ நாஹி(ம்)**

19. பிரபுவின் (இராமபகவானின்) கணையாழியை வாயில் வைத்துக் கொண்டு, கடலின் மேலாக நீங்கள் இலாவகமாகத் தாவியதில் வியப்பு ஏதுமில்லை.

*சீ*தையைத் தேடி வானரர்கள் அனுப்பப்பட்டார்கள். அவர்கள் இம்முயற்சியில் சமுத்திரத்தை அடைந்தனர். சமுத்திரத்தின் மறு கரையில் இலங்கை இருந்தது. சமுத்திரத்தை எப்படிக் கடப்பது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. இராம தூதர், இராமரின் கணையாழியை வாயில் வைத்துக் கொண்டார். பகவானின் நாம பலத்தினாலும் சக்தியினாலும் அவரால் அந்தப் பெரிய சமுத்திரத்தைக் கடந்து இலங்கையை அடைய முடிந்தது. பகவானின் நாமத்திற்கு அத்தகையதோர் மகத்தான சக்தி! மேலும், சீதை பக்தியின் அடையாளம். பக்தியையோ மோட்சத்தையோ அடைவதற்கு நாம் ஒரு சமுத்திரத்தைக் கடக்க வேண்டும். அந்தச் சமுத்திரம் எது? நான் இந்த உடம்பு எனும் தேகாபிமானம். இந்தத் தவறானதும் பொய்யானதுமான எண்ணத்தை

விடுவது, சமுத்திரத்தைக் கடப்பது போல் கடினமானது. ஆனால், பகவான் நாமத்தைத் தொடர்ந்து உச்சரிப்பதன் மூலம் நமது மனதைத் தூய்மைப்படுத்துவதால்; நாம் இந்த உடம்பு அல்ல என்பதை எந்தச் சந்தேகமும் இல்லாமல் புரிந்து; இந்தச் சம்சாரம் எனும் சமுத்திரத்தை எளிதாகக் கடக்கலாம். பகவான் நாமத்தைப் பக்தியுடனும் முழு நம்பிக்கையுடனும் உச்சரிப்பதன் மூலம் நாம் எதனையும் சாதிக்கலாம் என்பதில் சந்தேகமேயில்லை. அப்படிப்பட்ட நம்பிக்கையை உடையவர்கள் இவ்வுலகத்திலுள்ள எதைக் கண்டும் பயப்படுவதில்லை.

**துர்கம காஜ ஜகத கே ஜேதே,**
**ஸுகம அனுக்ரஹ தும்ஹரே தேதே.**

20. உங்கள் அருளினால், இவ்வுலகின் கடினமான காரியங்களும் எளிதாக நடந்தேறும்.

நாம் சந்திக்கும் எத்தகைய இடர்களையும் தடைகளையும் ஸ்ரீ ஹனுமானின் அருளினால் வெற்றி கொள்ளலாம். இவ்வுலகில் மூன்று வகையான மக்கள் இருக்கின்றார்கள்.

1. சிலர் தடைகளுக்குப் பயந்து எந்தவிதமான புதிய முயற்சிகளையோ திட்டங்களையோ ஆரம்பிக்கமாட்டார்கள். இவர்கள் எல்லாவிதமான பிரச்சினைகளையும் தடைகளையும் கற்பனை செய்தவாறு இருப்பதால் அவர்கள் எந்தக் காரியத்தையும் தொடங்குவதேயில்லை.

2. இன்னும் சிலர் பல புதிய திட்டங்களை ஆரம்பிப்பார்கள், ஆனால் ஒரு தடையோ இடரோ வந்துவிட்டால், உற்சாகத்தையும் பொறுமையையும் இழந்து வேலையைக் கைவிட்டுவிடுவார்கள் அல்லது வேறு ஒன்றுக்குத் தாவுவார்கள். இதனால், இவர்கள் எதையும் செய்து முடிப்பதனால் வரும் பூரண திருப்தியை அனுபவிப்பதில்லை.

3. வேறு சிலர், இடர்களையும், தடைகளையும் கண்டவுடன் புதிய உற்சாகத்தையும் தைரியத்தையும் அடைவார்கள். இவர்கள்

எடுத்த காரியம் முடியும் வரை விடாமல் முயற்சிப்பார்கள். இவர்கள் உண்மையான திருப்தியையும் வெற்றியையும் அடைகிறார்கள்.

இந்த மூன்றாவது வகையினருக்கு ஸ்ரீ ஹனுமான் அருள் புரிந்து அவர்களின் வேலையை எளிதாக்குகிறார். இதனால், மிகவும் கடினமான காரியமும் அடைவதற்கு எளிதாகின்றது.

**ராம துஆரே தும ரகவாரே**
**ஹோத ந ஆக்ஞா பினு பைஸாரே**

21. நீங்கள் இராமபகவானின் வாயிலைக் காப்பவர். உங்கள் அனுமதியின்றி எவரும் அதனுள் நுழைய முடியாது.

**ஸப ஸுக லஹை தும்ஹாரீ ஸரனா**
**தும ரச்சக காஹூ கோ டர நா.**

22. உங்களைச் சரணடைந்தவர்கள் அனைவரும் எல்லாவிதமான ஆனந்தத்தையும் அடைகிறார்கள். பாதுகாக்க நீங்கள் இருக்கும் போது யார் எதைக் கண்டு பயப்பட வேண்டும்?

இராம பகவானின் வாசலில் எப்போதுமே விழிப்புடன் இருப்பவர் மாருதி. இதன் அர்த்தம், அவர் நாம் உள்ளே செல்லாமல் தடை செய்பவர் என்பது அல்ல. அவர் இராமரை நோக்கி அனைவரையும் கவர்ந்து இழுப்பவர். அதுதான் அவரது வேலை. இதனால்தான் ஸ்ரீ ஹனுமான், இலக்குவனை விட இராமனுக்குப் பிரியமானவராகிறார். "ஹனுமான் தனது பக்தியினால் அனைவரையும் என்மீது அன்பு வைக்க ஊக்கமளித்து உற்சாகம் ஊட்டுகிறார், அதனால் அவர்கள் என்னை நோக்கி வருகிறார்கள்" என்று ஸ்ரீராமர் கூறுகிறார்.

ஏற்கனவே கூறப்பட்டது, "தும உபகார ஸுக்ரீவஹி கீன்ஹா, தும்ஹரோ மன்த்ர பிபீஷண மானா" - ஸ்ரீ ஹனுமானின் உதவியால் சுக்ரீவன் இராஜ்யத்தை அடைந்தான், அவரின் ஆலோசனையைக் கேட்டு விபீஷணன் இராமனிடம் சரணடைந்தான். இராம நாமத்தை உச்சரிப்பதால் எந்தக் காரியத்தையும் முடிப்பது மட்டுமல்ல,

ஹனுமானின் நாமத்தை உச்சரிப்பதாலும் நாம் எந்தக் காரியத்தையும் முடிக்கலாம். அவர் நம்மை வீரம் மிக்கவர்களாகவும், பயமற்றவர்களாகவும் மாற்றி; பக்தி, நம்பிக்கை மற்றும் பலம் என்பவற்றை நம்முள் நிரப்புகிறார். அனுமனைச் சரணடைவதன் மூலம் நாம் அவரது நற்பண்புகள் அனைத்தையும் பெறலாம். மேலும், நம்மை அனைத்து மனிதர்களினதும் அதி உன்னத இலக்கான இராமரிம் (அவர் வேறு எவருமில்லை அந்தப் பரமாத்மாதான்) அவர் அழைத்துச் செல்கிறார்.

**ஆபன தேஜ ஸம்ஹாரோ ஆபை**
**தீனோ(ம்) லோக ஹா(ம்)க் தே கா(ம்) பை**

23. உங்கள் சக்தியைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் உங்களுக்கு மட்டுமே உண்டு. நீங்கள் கர்ஜிக்கும் போது மூவுலகும் நடுங்கும்.

**பூத பிஸாச நிகட நஹி(ம்) ஆவை**
**மஹாபீர ஜப நாம ஸுனாவை.**

24. பூதங்களும் பிசாசுகளும் மஹாவீரரான உங்கள் நாம ஜபத்தைக் கேட்டதும் அருகில் நெருங்கா.

ஸ்ரீ ஹனுமானின் பலம் வேறெவராலும் கட்டுப்படுத்த இயலாதது. அவரது கர்ஜனையைக் கேட்டு மூன்று உலகங்களும் (சுவர்க்கம், பூமி பாதாளம்) பயத்தினால் நடுங்கும். அவரது பலத்திற்கும், சக்திக்கும் எல்லை இல்லை. அனுமனின் நாமத்தை உச்சரிக்கும் போது அந்தச் சக்தியும் தைரியமும் பக்தனுக்கும் வருகிறது. பேய்களோ பிசாசுகளோ அந்த பக்தனை அண்டுவதில்லை.

பேய் என்றால் என்ன? ஒருவர் அகால மரணம் (தற்கொலையினாலோ அல்லது கொலையினாலோ) அடையும் போது அவரது உயிர் அந்த இடத்தில் நடமாடுகிறது. சாதாரணமாக, மரணத்தின் பின்னர் உயிர் வேறொரு உடலை எடுக்கிறது. ஆனால், ஏதாவதொரு காரணத்திற்காக இது உடனே நடைபெறாவிட்டால்,

அந்த உயிர் அங்கு சிலகாலம் நடமாடுகிறது. இதுவே பேய் எனப்படுகிறது. ஹனுமானின் நாமத்தை உச்சரிப்பது பேய்களையும் தீய ஆவிகளையும் நம்மிடமிருந்து விலகி இருக்கச் செய்கிறது.

**நாஸை ரோக ஹரை ஸப பீரா**
**ஜபத நிரந்தர ஹனுமத பீரா**

25. வீர ஹனுமானே, உங்கள் நாமத்தைத் தொடர்ந்து ஜபித்தால் வியாதிகள், நோய்கள் மற்றும் கிலேசங்கள் மறைந்து விடுகின்றன.

ஸ்ரீ ஹனுமானின் நாமத்தை இடைவிடாமல் உச்சரிப்பவர்களின் நோய்கள் குணமாகின்றன. வேதனைகள் மறைந்து விடுகின்றன. குணமாக்க முடியாதெனக் கூறப்படும் நோய்களும் குணமாகின்றன. சிலர் "எனக்குப் புற்றுநோய் குணமாகுமா?" என்று கேட்கலாம் ஆம்! உங்களுக்குப் பூரண நம்பிக்கை இருந்தால் அதுகூட முடியும். நம்மைத் துன்பப்படுத்தும் நோய்கள் அனைத்தும் உடலினதும் மனதினதும் நோய்களே. ஸமஸ்கிருதத்தில் உடலின் நோயை "வ்யாதி" என்றும், மனதின் நோயை "ஆதி" என்றும் கூறப்படுகிறது. இந்த உடலும் மனமும் நாம் என நினைக்குமளவும், இந்த நோய்கள் நமக்குத் துன்பத்தை விளைவிக்கின்றன. உடலும், மனமும் நாம் எனும் தேகாபிமானத்தையும் அதனால் வரும் பற்று அல்லது பந்தங்களையும் ஒழித்தால், இறப்புக்கும் நாம் அஞ்சோம். இந்த உடல் மற்றும் மனதின் நோய் நொடிகளை ஒரு கம்பீரத்துடனும் தைரியத்துடனும் எதிர்கொள்ளலாம். மேலும் நம்மை அவை பாதிக்காது.

இராம தூதன் நம்மை இராமனிடம் அழைத்துச் செல்கிறார்; அவர் பகவானும் நாமும் (நமது ஆத்மா) அடிப்படையில் ஒன்றுதான் என அறிந்து கொள்ளச் செய்கிறார். அப்படி அறிந்தவர்க்கு உடலினதும் மனதினதும் உபாதைகள் அதன் பின்னர் இருப்பதில்லை. அவர்கள் எல்லாத் துயரங்களையும் கடந்து விடுகின்றனர்.

**ஸங்கட தே ஹனுமான சுடாவை**
**மன க்ரம பசன த்யான ஜோ லாவை.**

26. சொல்லாலும், செயலாலும், மனத்தாலும் உங்களை வணங்குபவர்களைத் துன்பங்களிலிருந்து விடுவிப்பவர் நீங்கள்.

நாம் சொல்லாலும், செயலாலும், மனத்தாலும் ஸ்ரீ ஹனுமானை வழிபட்டால், அவர் நம்மை எல்லா இடர்களிலிருந்தும் விடுவிப்பார். "மன" என்றால் மனது. "க்ரம" என்றால் செயல், "பசன" என்றால் சொல். ஆகவே நமது எண்ணங்கள், சொற்கள், செயல்கள் அனைத்துமே இறைவனை வணங்குபவையாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால் நமது செயல்கள் பந்தத்திற்கோ, துக்கத்திற்கோ காரணமாகாது.

**ஸப பர ராம தபஸ்வீ ராஜா**
**தின கே காஜ ஸகல தும ஸாஜா**

27. தபஸ்விகளில் உயர்ந்தவரும், இந்த உலகத்தையே ஆள்பவருமான இராமபிரானின் காரியங்களனைத்தையும் செய்து முடித்தீர்கள்.

**ஔர மனோரத ஜோ கோஇ லாவை**
**ஸோஇ அமித ஜீவன பல பாவை**

28. உங்கள் கருணையை நாடுபவர்களை ஆசீர்வதித்து, அவர்கள் கேட்பது அனைத்தையும் அதிகமாகவே கொடுப்பதுடன், அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் கொடுப்பவர் நீங்கள்.

ஸ்ரீ ஹனுமானை வழிபட்டால், எடுத்த காரியங்களில் எல்லாம் வெற்றி கிட்டும். நமக்குத் தோல்வியே இல்லை. இதற்கு என்ன உத்தரவாதம்? நினைத்துப் பாருங்கள். மாருதி இராம பகவான் இட்ட வேலைகள் அனைத்தையும் வெற்றிகரமாகச் செய்து முடித்தார். அவரால் பகவானின் வேலைகளையே செய்ய முடிந்தால், நமது வேலைகளை அவரால் ஏன் செய்ய முடியாது? நாம் வாழ்க்கையில் எதை விரும்புகிறோமோ அதனை அனுமன் நமக்கு அளிப்பார். அவர் நமக்காக எதையும் செய்வார். ஆனால் நமது விருப்பங்களும் ஆசைகளும் உயர்ந்தவையாகவும் நன்மை விளைவிப்பனவாகவும் இருக்க வேண்டும்.

**சாரோ(ம்) ஜுக பரதாப தும்ஹாரா**
**ஹை பரஸித்த ஜகத உஜியாரா**

29. உங்கள் பெருமை நான்கு புறங்களிலும் பரவியிருக்கின்றது. உங்கள் புகழ் பிரபஞ்சமெங்கும் ஒளிர்கிறது.

**ஸாது ஸந்த கே தும ரகவாரே**
**அஸுர நிகந்தன ராம துலாரே**

30. சாதுக்களையும், முனிவர்களையும் பாதுகாப்பவரே! அசுரர்களை அழிப்பவரே! இராமபகவானுக்குப் பிரியமானவரே!

உங்கள் புகழ் நான்கு யுகங்களிலும் (சத்ய, த்ரேதா, த்வாபர, கலி) பரவி உள்ளது. ஹனுமான் - இராமன் த்ரேதா யுகத்தில் அவதரித்த போது இருந்தார். அப்படியாயின் எப்படி அவர் புகழ் நான்கு யுகங்களிலும் பரவி இருக்கலாம்? இறைவனின் புகழும் பெருமையும் காலத்திற்கு அப்பாற்பட்டது. அதே போன்று அவரது பக்தனின் பெருமையும் காலத்திற்கு அப்பாற்பட்டது. மேலும், நான்கு யுகங்களும் ஒன்றை ஒன்று தொடர்ந்து சுழற்சியாக வருவன. கடைசியாக கலியுகம் முடிந்ததும் மீண்டும் சத்யயுகம் தொடங்கும். ஆகவே வாயு புத்திரன் புகழ் எப்போதுமே நினைவு கூரப்படும். அது மட்டுமல்ல வாயுபகவான் எப்போதுமே இருப்பவர். அவர் இல்லாமல் உயிர்கள் வாழமுடியாது. ஆகவே அவரது புத்திரனும் எப்போதுமே இருப்பவர் (சிரஞ்சீவி).

அவர் சாதுக்களையும் முனிவர்களையும் பாதுகாப்பவர், தீயவர்களை அழிப்பவர். ஒருவர் பலம் மிக்கவராக இருந்தால் தனது பலத்தை நல்லவர்களுக்கு உதவுவதற்கும் தீயசக்திகளுடன் போராடவும் பயன்படுத்த வேண்டும். அனுமன் இராமருக்கு மிகவும் பிரியமானவராக இருந்ததில் வியப்பு எதுவுமில்லை.

**அஷ்ட சித்தி நௌ நிதி கே தாதா**
**அஸ பர தீன ஜானகீ மாதா**

31. அஷ்ட சித்திகளையும் நவ நிதியங்களையும் அளிக்கும் சக்தியை உங்களுக்கு வரமாக ஜானகி மாதா தந்தார்.

ஹனுமான் சீதையைச் சந்திக்க இலங்கைக்குச் சென்ற போது, அவரைச் சந்தித்து இராமரின் செய்தியை அவரிடம் சேர்ப்பித்து, பகவானின் புகழையும் பாடினார். இதற்கு முன்னர் சீதை சோகமே உருவமாய் இருந்தார், ஆனால் இராமர் அவரை அழைத்துச் செல்ல வருகிறார் என்று கேள்விப்பட்டதும் அவர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. உடனேயே "நீ யோகிகளின் எட்டு விதமான தெய்வீக சக்திகளையும் (அஷ்ட சித்திகள்) குபேரனின் ஒன்பது விதமான செல்வங்களையும் (நவ நிதி கொடுப்பவன் ஆவாய்" என்று அருளினார்.

சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கும் இந்த எட்டு விதமான தெய்வீக சக்திகளாவன :

1. **அணிமா :** மிகச் சிறிய உருவம் (அணுவைப் போல்) எடுக்கும் சக்தி

2. **மஹிமா :** மிகப் பெரிய உருவம் எடுக்கவும், அனைத்தையும் பெரியதிலிருந்து சிறியது வரை - ஊடறுக்கவும் உதவும் சக்தி. ஹனுமான் இலங்கைக்குச் சென்றிருந்த வேளை, சீதா அம்மையாரைச் சந்திப்பதற்கு மிகச் சிறிய உருவம் எடுத்தார். அசுரர்களை எதிர்க்கும் போது மிகப் பெரிய உருவம் எடுத்தார்.

3. **கரிமா :** தன்னைக் கனமாக்கும் சக்தி. உடலின் ஒவ்வொரு அங்கமும் ஒருவராலும் தூக்க முடியாத அளவுக்குப் பாரமாகும். மஹாபாரதத்தில் ஒரு கதை - ஒரு முறை பலசாலியான பீமன் காட்டில் நடந்து கொண்டிருந்தான். அவன் வழியில் படுத்திருக்கும் ஸ்ரீ ஹனுமானைக் காண்கிறான். அவரது வால் பாதைக்குக் குறுக்காக இருந்தது. அவரை ஒரு சாதாரண வானரம் என நினைத்த பீமன், பாதையின் குறுக்காக இருக்கும் வாலை எடுக்குமாறு கூறுகிறான். அனுமனோ, நான் வயதானவன் நீயே

எனது வாலைப் பாதையிலிருந்து எடுத்து விடு என்கிறார். பீமனும் வாலைத் தூக்க முயன்றான். ஆனால் அவனோ பலம்மிக்கவனாயினும் அவனால் வாலை சிறிது கூட அசைக்க முடியவில்லை. அப்போதுதான், இது ஒரு சாதாரண வானரம் அல்ல என்பது அவனுக்குப் புரிந்தது. அவன் பணிவுடன் ஹனுமானின் காலில் விழுந்து வணங்கினான். இங்கு, ஸ்ரீ ஹனுமான் தனது கரிமா எனும் சக்தியைக் காட்டினார்.

4. **லகிமா :** உடலைக் கனமில்லாமல் ஒரு இறகினைப் போல் லேசாக்கிக் கொள்ளும் சக்தி. இலங்கையில் இருந்தபோது, ஒரு சமயம் அவரது உருவம் மிகவும் பெரியதாகவும், உயரமாகவும் இருந்தது. ஆனால், அவரால் இலகுவாகக் கூரையிலிருந்து கூரைக்கு கட்டிடங்களைச் சேதமாக்காமல் தாவ முடிந்தது. இது அவரின் லகிமா சக்தியினாலேயே ஆகும்.

5. **ப்ராப்தி :** ஒருவர் விரும்பியதை அடையும் சக்தி. இச்சக்தியினால் ஒருவர் ஒரு இடத்திலேயே அமர்ந்து கொண்டு இப்பூமியில் மட்டுமல்ல - பிரம்மலோகம் உட்பட மற்றைய உலகங்கள் அனைத்திலும், நடப்பதனைத்தையும் அறிந்து கொள்ளலாம். இன்று தொலைக்காட்சி, செய்மதிகள், மற்றும் தொலைநோக்கி ஆகியவற்றின் உதவியுடன் பிரபஞ்சத்தின் பகுதிகளைப் பார்த்து அறியக்கூடியதாக உள்ளது. ப்ராப்தி எனும் சக்தி உடைய ஒருவர். எந்த கருவியும் இல்லாமல் அனைத்து பிரபஞ்சங்களிலும் உள்ள எல்லாவற்றையும் காணவும் அனுபவிக்கவும் முடியும்.

6. **ப்ராகாம்யம் அல்லது ப்ராகாஷ்ய :** ப்ராகாம்யம் என்பது பூமி, சுவர்க்கம் மற்றும் பாதாள உலகம் என, மூவுலகில் எங்கும் செல்லும் சக்தி. ப்ராகாஷ்ய என்பது தானே ஒளிரும் உடலைக் கொண்டிருப்பது. ஸ்ரீ கிருஷ்ணரின் உடல் அத்தகையது. கோபியர் வெண்ணையை இருட்டானதோர் இடத்தில் ஒளித்து வைத்தனர். ஆனால் கிருஷ்ணரோ இரவில் தன் நண்பர்களுடன் வருவார். அவரது உடலின் பிரகாசத்தின் உதவியுடன் வெண்ணையை அவர்கள் இலகுவாகக் கண்டுபிடித்து உண்டுவிடுவார்கள்.

7. **ஈஷித்வம் :** மூவுலகையும் ஆளும் சக்தி. மாருதி தனது நல்ல செயல்களாலும், நடத்தையாலும் (உடல் பலத்தால் அல்ல) அனைவரது இதயத்தையும் ஆட்சி புரிபவர்.

8. **வஷித்வம் :** அனைவரையும் கட்டுப்படுத்தும் மற்றும் அவர்களை பின்பற்ற வைக்கும் சக்தி. அனுமனின் வசீகரமான தனிப்பண்பு அனைவரையும் அவரை நேசிக்கவும் அவருக்குக் கீழ்ப்படியவும் வைத்தது. இது இராமபிரானுக்கும் பொருந்தும். அவர் காட்டுக்குச் சென்ற போது அயோத்தி நகர மக்கள் அனைவரும் அவரைத் தொடர்ந்தனர். ஸ்ரீ கிருஷ்ணர் தனது புல்லாங்குழலை இசைத்ததும் கோபியர் மட்டுமல்ல பசுக்களும் பறவைகளும் கூட அவரிடம் வந்தன.

**நவநிதி :** குபேரனின் ஒன்பது வகையான செல்வங்கள் மற்றும் விலை மதிப்புமிக்க கற்களாவன : மஹாபத்ம, பத்ம, ஷங்க, மகர, கசபா, முகுந்த, குந்த, நீல மற்றும் கர்வ. ஆனால் செல்வங்களிலேயே உயர்ந்த செல்வம்தான், ஸ்ரீ ஹனுமான் நமக்குத் தரும் இராமரஸம் எனும் பகவத் பக்தி. ஒருவருக்கு இது இருந்தாலே போதும், வேறெந்தச் செல்வமும் தேவையில்லை.

**ராம ரஸாயன தும்ஹரே பாஸா**
**ஸதா ரஹோ ரகுபதி கே தாஸா**

32. எப்போதும் இரகுபதியின் காலடியில் அவரின் சேவகனாக விளங்கும் உங்களிடம், இராமபக்தியெனும் அமிர்தம் உண்டு.

**தும்ஹரே பஜன ராமகோ பாவை**
**ஜனம ஜனம கே துக பிஸராவை(ம்)**

33. உங்கள் புகழைப் பாடுபவர்களுக்கு இராமர் அருள் புரிவதுடன், ஜன்ம ஜன்மமாக அவர்களுக்கு ஏற்பட்ட துன்பங்களும் விலகிப் போகின்றன.

**அந்த கால ரகுபர புர ஜாஈ**
**ஜஹா(ம்) ஜன்ம ஹரி பக்த கஹாஈ**

34. அவர்கள் தங்கள் கடைசிக் காலத்தில் இராமபிரானின் இருப்பிடத்தை அடைவதுடன், இந்தப் பிறவியில் ஹரிபக்தன் என்று போற்றவும்படுகிறார்கள்.

சீதை "நீ எப்போதுமே பக்தியுடனும், அன்புடனும் இராமருக்குச் சேவை செய்வாய், எப்போதுமே இராமரின் சேவகனாக இருப்பாய். உன்னை வணங்குபவர்கள் அனைவரும் இராம பகவானை அடைவார்கள்" என்று ஸ்ரீ ஹனுமானை ஆசீர்வதித்தார். மேலும் இவரைப் புகழ்ந்தால், இராபிரான் மகிழ்ச்சி அடைகிறார். ஆகவே இராமரை மகிழ்விக்க இதுதான் சிறந்த வழி. அனுமனை வழிபடுபவனுக்குத் துன்பம் இல்லை. அவன் இப்பிறவியினதும் கடந்த பிறவியினதும் துயரங்கள் அனைத்தையும் மறக்கிறான். அப்படியானவன் இறக்கும் போது வைகுந்தலோகம் அல்லது சாகேதலோகம் எனப்படும் இராமரின் இருப்பிடத்தை அடைகிறான். ஹனுமானின் பக்தர்கள் அனைவரும் இராம பக்தர்களாகின்றனர். பகவானின் இருப்பிடத்தில் இந்த பக்தர்கள் என்ன செய்கின்றனர்? அவர்கள் இறைவனைத் தரிசிக்கிறார்கள், இறைவனின் தெய்வீக சந்நிதியில் திளைக்கின்றனர். ஒரு வேலையும் செய்யாமல், இறைவனைப் பார்த்த வண்ணம் இருப்பதா? இது ஒரு பிரயோசனமும் இல்லாத வேலை என்று சிலர் கூறலாம். ஆனால் அதே சிலர், தொலைக்காட்சி பார்ப்பதில் மட்டும் பல மணிநேரம் செலவிடுவர்! அழகு, கருணை, காருண்யம் என்பவற்றின் வடிவமான கடவுளின் சந்நிதியிலிருப்பதால் உண்மையான பக்தர்கள் களைப்படைவதே இல்லை. உண்மையில் பக்தர்கள் இறைவனுடன் இருக்க வேண்டும் என்பதற்காக அவர் அவதாரம் எடுக்கும் போதெல்லாம் பூமியில் பிறக்க விரும்புகிறார்கள்.

**ஔர தேவதா சித்த ந தரஈ**
**ஹனுமத ஸேஇ ஸர்ப ஸுக தரஈ**

35. ஹனுமானின் பக்தர்கள் வேறு எந்த தேவதைகளையும் வழிபடத் தேவையில்லை. ஹனுமானுக்குச் சேவை செய்வதினால் அவர்களுக்கு எல்லாவித சுகங்களும் கிடைக்கின்றன.

**ஸங்கட கடை மிடை ஸப பீரா**
**ஜோ ஸுமிரை ஹனுமத பல பீரா**

36. பலமும் வீரமும் மிக்க ஹனுமானை நினைப்பவர்களின் துன்பங்களும் தொந்தரவுகளும் அழிந்து போகின்றன.

கோஸ்வாமி துளஸீதாஸர், நாம் வேறு எந்தத் தெய்வங்களையும் நினைக்கத் தேவையில்லை, ஸ்ரீ ஹனுமானை நினைத்தாலே போதும், தேவையானது அனைத்துமே அவரிடமிருந்து நமக்குக் கிடைத்து விடும் என்று கூறுகிறார். இதன் அர்த்தம் என்ன? ஒருவர் யாரை வழிபடுகிறாரோ, அவரிடம் முழு நம்பிக்கை வைக்கவேண்டும். நமக்கு ஒருமுகமான பக்தி இருக்க வேண்டும். நாம் அனுமனை முழு நம்பிக்கையுடன் வழிபட்டால் நமது பிரார்த்தனை எல்லாவற்றுக்கும் பதில் கிடைக்கும். இந்த பாடலின் மற்றுமொரு அர்த்தம் - சிலர் மற்றைய தெய்வங்களையும் தேவர்களையும் உலக இன்பங்களுக்காகவும் காரிய சித்திக்காகவும் வழிபடுகின்றனர். ஆனால் இந்தத் தேவர்களுக்கும் ஆசைகள் அதிகம் உண்டு. தமது தவத்தின் வலிமையினால் இந்திர பதவியைப் பறித்து விடுவார்களோ என்று கடும் தவம் செய்பவர்களைக் கண்டால் இந்திரனுக்குப் பயம். இப்படிப்பட்ட தேவர்கள் சில நேரங்களில் நமது பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பதில்லை. ஆனால் பகவானிடம் ஹனுமானுக்கு இருக்கும் பக்தியில் எந்தவிதமான சுயநல ஆசைகளும் இல்லை. அவர் எப்போதும் மற்றவர்கள் சேவையில் ஈடுபட்ட வண்ணம் இருக்கிறார். ஆகவே எப்போதுமே அவர் நமது பிரார்த்தனைகளுக்குப் பதில் அளிப்பார். இதனால் நாம் அவரை மட்டுமே வழிபட வேண்டும். நமது பிரச்சனைகள், வேதனைகள் மற்றும் துக்கங்கள் அனைத்தும் நீங்கும்.

**ஜை ஜை ஜை ஹனுமான கோஸாஈ**
**க்ருபா கரஹு குருதேவ கீ நாஈ**

37. ஹனுமானுக்கு வெற்றி ! வெற்றி ! வெற்றி ! என்று பாடுகிறேன். நீங்கள் எங்கள் குருவாகி, எங்களுக்கு உங்கள் கருணையைத் தந்து அருளுங்கள்

கோஸ்வாமியான ஸ்ரீ ஹனுமானே உங்களுக்கு வெற்றி. "கோஸ்வாமி" என்ற ஸமஸ்கிருத பதத்தின் பொருள் தனது புலன்களைக் கட்டுப்படுத்தியவர் என்பதாகும் ( கோ - புலன் உறுப்புக்கள், ஸ்வாமி - எஜமான்). தனது உடலையும் மனதையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதால், எத்தகைய சவால்களுக்கும் முகம் கொடுத்து வெற்றி பெறுவார் ஸ்ரீ ஹனுமான். தனது புலன்களைப் பூரணமாகக் கட்டுப்படுத்தி அவரை முழு பக்தியுடன் வழிபடுபவர் எப்போதுமே வெற்றி அடைவர். அத்தகையவருக்கு எந்த ஒரு சவாலும் பெரிதல்ல. நம்மில் பலர் மனதைக் கட்டுப்படுத்தாமல் அதனை அங்கும் இங்கும் அலைய விடுகிறோம். நம் மனதை ஒருமுகப்படுத்த வேண்டும்.

"நாஈ" என்றால் போல என்று அர்த்தம். ஸ்ரீ ஹனுமான் ஒரு குரு, கருணைமிக்க ஆசிரியர் போன்றவர். இந்த உலகின் குரு (ஜகத்குரு) எனக்கருதப்படும் சிவபெருமானின் அவதாரமே ஹனுமான் என நாம் முன்னர் கண்டோம். ஸ்ரீ ஹனுமான் ஒரு காருண்யம் மிக்க குரு - நாம் அவரிடமிருந்து கற்க வேண்டும். சிஷ்யர்களின் பலவீனத்தை விழுங்குபவர் என்ற அர்த்தமும் குரு என்ற பதத்திற்கு உண்டு. சீடர்கள் மதியீனமாக நடந்து கொண்டாலோ அல்லது தவறுகள் இழைத்தாலோ ஒரு உண்மையான குரு அதனைப் பெரிது படுத்தமாட்டார். சீடர்கள் தமது தவறுகளைத் திருத்திக் கொள்வதற்கு, அவர் உதவி செய்வார். ஆகவே ஹனுமானை வழிபட வேண்டும். அவர் நமது தவறுகளைத் திருத்திக் கொள்வதற்கு உதவி செய்வார்.

**ஜோ ஸத பார பாட கர கோஈ**
**சூடஹி பந்தி மஹா ஸுக ஹோஈ**

38. இதை நூறு முறை படிப்பவன் பந்தங்களிலிருந்து விடுபட்டு எல்லையிலா ஆனந்தத்தில் திளைக்கின்றான்.

**ஜோ யஹ படை ஹனுமான சலீஸா**
**ஹோய ஸித்தி ஸாகீ கௌரீஸா**

39. ஹனுமான் சாலீஸாவைப் படிப்பவர் எடுத்த காரியங்களில் வெற்றியடைவர். இதற்குச் சிவனே சாட்சி.

ஹனுமான் சாலீஹாவை நூறு முறை படிப்பவர்கள் எல்லா விதமான பந்தங்களிலிருந்தும் துன்பங்களிலிருந்தும் விடுவிக்கப்படுகின்றனர். பலர் ஹனுமான் சாலீஸாவை செவ்வாய் அல்லது சனிக்கிழமைகளில் நூறு தடவை படிப்பர். இதற்கு ஆறிலிருந்து ஏழு மணிநேரம் பிடிக்கும். தமக்கு வாழ்க்கையில் பிரச்சினைகளும் மன அழுத்தங்களும் வரும்போது சிலர் ஹனுமான் சாலீஸாவைத் தொடர்ந்து படிப்பார்கள். இதனைப் படிப்பதால் நமக்கு நிச்சயமாகத் துன்பங்களிலிருந்து நிவாரணம் கிடைக்கும். ஹனுமான் சாலீஸாவைப் படிப்பவர்கள் பூரணம் அடைகிறார்கள். சிலர் இது நம்பமுடியாத ஒரு கதை என்று கூறலாம். இப்படிப்பட்ட ஒன்று நடக்கும் என்று எப்படி எமக்குத் தெரியும்? கோஸ்வாமி துளஸீதாஸர் சிவபெருமானே இதற்குச் சாட்சி என்று கூறுகிறார். நாம் பூரணம் அடைவோம் என்பதற்கு அவரே உத்தரவாதம். இதை நாம் எப்படிப் புரிந்து கொள்வது? ஹனுமான் சாலீஸாவைத் தினமும் படிப்பது, நம்மில் உயர்ந்த எண்ணங்களை உருவாக்குகிறது. ஹனுமான் சாலீஸாவின் அர்த்தம் நமது மனதைத் தூய்மைப்படுத்த உதவும் என்பதை இதிலிருந்து புரிந்து கொள்ளலாம். நாம் ஆன்மீகப் பயணத்தைத் தொடங்கியதும், நமது சக்தி எல்லாம் இந்த இலட்சியத்தை நோக்கிச் செலுத்தப்படுகின்றது. முயற்சிகளை ஒருமுகப்படுத்துவதால் நாம் முக்தி எனும் விடுதலையை அடையலாம்.

ஆகவே நாம் எப்படியாவது இந்தப் பயணத்தைத் தொடங்க வேண்டும். கடும் உழைப்பினாலும் முயற்சியினாலும் வெற்றி பெறலாம்.

**துலஸீதாஸ ஸதா ஹரி சேரா**
**கீஜை நாத ஹ்ருதய மஹ(ம்) டேரா.**

40. ஹனுமானே! துளஸீதாஸாகிய அடியேன் எப்போதும் பகவானின் (இராம பகவான்) சேவகன். எனது இதயத்தை நீங்கள் தங்களது இருப்பிடமாக்கியருளப் பிரார்த்திக்கிறேன்.

ஹனுமான் சாலீஸாவை இயற்றிய கோஸ்வாமி துளஸீதாஸர் தன்னை பகவான் ஹரியின் (இராம பகவான்) சேவகன் என்று கருதுகிறார். "ஹரி" என்றால் எல்லாத் துன்பங்களையும் நீக்குபவர் என்று அர்த்தம். அவர் கூறுகிறார். "பகவானே! எனது இதயத்தில் இருங்கள், அங்கேயே எப்போதும் இருங்கள், என்னை விட்டுப் போகாதீர்கள்".

தோஹா :

**பவன தனய ஸங்கட ஹரண மங்கல மூரதி ரூப,**
**ராம லகன ஸீதா ஸஹித ஹ்ருதய பஸஹு ஸீரபூம்.**

ஓ வாயு புத்திரனே, துன்பங்களை அழிப்பவரே, நீங்கள் அனைத்து மங்களங்களின் வடிவம். தேவர்களின் அரசே. இராமன், இலக்குவன், சீதை ஆகியோருடன் அடியேனது மனதில் என்றும் வாசம் செய்வீராக !!!

ஸ்ரீ ஹனுமான் என் மனதில் எப்போதுமே வாசம் செய்வாராக. மங்களமே வடிவமான, அனைத்து இடர்களையும் நீக்கும் வாயுபகவானின் புத்திரன், அனைத்துத் தெய்வங்களுக்கும் அரசன். அவர் எப்போதுமே என் மனதில் வாசம் செய்வாராக. ஸ்ரீ ஹனுமான் தனியாக இருப்பதில்லை. இராமர், இலக்குமணன், சீதா அம்மையார் ஆகியோர் அவருடன் எப்போதும் இருக்கிறார்கள். இறைவன்

எப்போதுமே தனது பக்தன் இருக்கும் இடத்தில் வாசம் செய்கிறார். ஆகவே, இராமபிரான் நிச்சயமாக அனுமனுடன் நமது இதயத்தில் இருப்பார். மேலும், நாம் ஏற்கனவே கண்டது போல், இராமர் ஞானத்திற்கும், சீதாதேவி பக்திக்கும், இலக்குவன் விருப்பு வெறுப்பின்மைக்கும் அடையாளம். ஹனுமான் இந்தப் பண்புகளின் மொத்த வடிவம். நாம் அவரை வழிபடுவதால் இந்தப் பண்புகளை நம்மிலும் பதியவைக்கலாம்.

இதுதான் ஹனுமான் சாலீஸாவின் மகிமை, முதலில் வாசிக்கும் போது எளிமையாக அல்லது சாதாரணமானதாக இருந்தாலும், இதன் கருத்தைப் புரிந்து கொண்டு பக்தியுடன் இதனைப் படிப்பதனால் மகத்தான நன்மை விளையும். இதனைத் தினமும் ஒரு தடவையாகிலும் படிக்க வேண்டும். அப்படிச் செய்வது நமது மனதைத் தூய்மையாக்க உதவும். நம்மை முக்திக்கு இட்டுச் செல்லும். ஆன்மீகப் பாதைக்கு வழிகாட்டும்.

**ஓம் தத் ஸத்**

ஸியாவர ராமசந்ர கீ ஜய்
சீதா தேவியாரின் கணவர் இராமபிரானுக்கு வெற்றி !

பவனஸுத ஹனுமான கீ ஜய்
வாயு புத்திரன் ஹனுமானுக்கு வெற்றி !

உமாபதி மஹாதேவ கீ ஜய்
உமாதேவியாரின் பதியாகிய மஹாதேவருக்கு வெற்றி !

போலோ பாஈ ஸப ஸன்தன கீ ஜய்
அனைத்து சாதுக்களுக்கும் வெற்றி என்று பாடு சகோதரனே!

# அன்புடன் சேவை

சித்தபாரியில் இரண்டாவது விவேகசூடாமணி முகாமில் திரு. ஜெயராம் பக்தர்களுக்கு உணவு பரிமாறும் பணியில் பொறுப்பேற்றிருந்தார். அவர் கூறுவது : எனக்கு உதவிசெய்த சமூக சேவகர்களும், பிரம்மச்சாரிகளும் நான் கூறிய விதிமுறைப்படி நடக்காவிடில் என்னுடன் வேலை செய்வதில் கஷ்டப்பட்டனர். சாதாரணமாக, புதிதாக செய்த இனிப்புகளுக்கு அதிகத் தேவை இருந்தது. அதனால் நாங்கள் சாப்பிடும்பொழுது ஒரு முறை இனிப்பு வழங்குவதுடன் நிறுத்தியிருந்தோம். அடுத்த முறை கொடுப்பதை நான் அனுமதிக்கவில்லை. சேவகர்கள் இந்த விதிமுறையை மீறினால் நான் கடுமையாக நடந்து கொண்டேன்.

சுவாமிஜியிடம் இதுபற்றி தெரிவிக்கப்பட்டது. அவருடைய கோபம் ஒரு சொற்பொழிவில் **நீ சேவை செய்வதானால் அன்புடன், ஈடுபாட்டுடன், அக்கறையுடன் சேவை செய். சத்தம் போடாமலும், கடுமையாக இல்லாமலும் சேவை செய்** என்று கர்ஜித்தார்.

அவருடைய இவ்வார்த்தைகள் என்னை நேரடியாகத் தாக்கியது. இரண்டு இரவுகள் எனக்குத் தூக்கம் வரவில்லை.இந்த சேவையை விட்டுவிட்டு மும்பைக்கு வீட்டிற்கு ஓடிவிடலாமா? என்று மனம் எண்ணியது. அவருடைய ஆசியுடன் உற்சாகத்துடன் அடுத்த நாளிலிருந்து சேவையைத் தொடர்ந்தேன் ஆனால் மாற்றத்துடன்.

# பிறவி நோய்க்கு மருந்து

1954ஆம் ஆண்டு ஷீலாலால் கோஸ்வானி என்கிற பக்தைக்கு வாழ்க்கை என்னும் வியாதியை சரி செய்ய பின்வரும் மருந்தை குருதேவர் எழுதினார். வாழ்க்கை என்னும் நோய் இரண்டாகப் பிரித்து காண்பது இது தன்னுணர்வு (EGO) என்ற சக்திமிக்க பூச்சியால் உண்டாகிறது. இது மனதிலும் புத்தியிலும் வாழ்கிறது. இந்த மருந்தை தினசரி சாப்பிட்டால் குணம் நிச்சயம்.

நேர்மை 11 கிராம்

அன்பு 10 அவுன்ஸ்

ஒழுக்கம் 10 கிராம்

தியானம் 9 அவுன்ஸ்

உண்மை பேசுதல் 8 கிராம்

எல்லோருக்கும் சேவை செய்தல் 6 மில்லி

தைரியம் 8 கிராம்

தூய்மை 3 மில்லி

நல்லவற்றை பின் தொடர்தல் 7 கிராம்

குப்பியை (புத்தியை) உபயோகப்படுத்து முன் குலுக்க வேண்டும். உபயோகித்த பிறகு அடக்கப்பட்ட மனதால் மூட வேண்டும்.

1. ஒருபொழுதும் அவதூறு பேசாதே, வேண்டுமென்றால் நிறைய ஓம் நமசிவாய குடி.
2. மிருகத் தன்மையிலும் புலன் ஈடுபாடுகளிலும் ரொம்பவும் அலையாதே.
3 தியானத்தில் ஓய்வு கொள்.
4. தினமும் ஒரு முறை உபநிடத ரசத்தைக் குடி.

# தன்னம்பிக்கை

மனம் சோராமல் மகிழ்ச்சி குன்றாமல், நீங்கள் அடையவிரும்பும் வெற்றிக் கம்பத்தை நோக்கிச் செல்லுங்கள். அப்படி வாழ்க்கையில் ஒரு குறிக்கோளை வைத்துக்கொண்டு முயலாவிட்டால்? உங்களுடைய திறமை முழுவதும் சிறப்பாக வெளிவர வழி கிடைக்காது. அப்படி நீங்கள் முயன்று பார்க்கும்போது கடவுள் உங்கள் வழியில் சோதனைகளை வைத்து உங்களைச் சோதிக்கிறார். பார்வைக்கு அவை கடக்க முடியாத தடைகளாகத் தோன்றுகின்றன.

உற்சாகம் குறையாமல், அச்சத்துக்கு இடந்தராமல் அந்த தடைகளைப் பொருட்படுத்தாமல், தொடர்ந்து முழுத் தன்னம்பிக்கையுடன் முயற்சிகளில் ஈடுபட்டு முன்னேறுங்கள். அந்தத் தடைகள், நிழல் போல் மறைந்துவிடும். அதுதான் கடவுளின் அருள்!

நீங்கள் செவி கொடுத்துக் கேட்டால் இறைவன் உங்கள் விடாமுயற்சியை, தன்னம்பிக்கையை, அச்சத்தை வென்ற துணிவை, பாராட்டிச் சிரிப்பது உங்கள் காதில் ஒலிக்கும்.

வாழ்க்கையில் நாம் அடையும் பொருள், நமக்குப் புகழைத் தருவதில்லை. அதற்கான முயற்சிதான் புகழை அளிக்கிறது.

நாம் பந்தயத்தின் முடிவில் அடையும் கோப்பையை யாரும் வெற்றி என்று பாராட்டுவதில்லை. ஓடி அடைந்த வேகத்தை, வெல்ல முயன்ற மனத்துணிவைத்தான் மெச்சுகிறார்கள்.

—— ஹரி ஓம் ——



மிகவும் பிரபலமான இந்நூலான ஹனுமான் சாலீஸா, வீராதி வீரரான ஸ்ரீ ஹனுமானின் பெருமையைப் புகழ்கிறது. நாற்பது செய்யுள்களால் கோஸ்வாமி துளஸீதாஸினால் கோர்க்கப்பட்ட இந்த அழகிய மாலையை நாம் தினமும் எமது இதயத்திலிருக்கும் ஸ்ரீ ஹனுமானிற்குச் சமர்ப்பிக்கலாம். பூஜ்ய குருஜி ஸ்வாமி தேஜோமயானந்தா அவர்களின் உரை இதற்கு அன்பெனும் தெய்வீக நறுமணத்தை சேர்க்கின்றது.

**சென்ட்ரல் சின்மயா மிஷன் ட்ரஸ்ட்**

தமிழ் புத்தகப்பிரிவு

சென்னை - 600 031.